# பரம்பரை மருத்துவம்

## பாகம் - II

(சித்த மருத்துவ சத்திர சிகிச்சை முறைகள்)

## Traditional Medicine -Part -II
## (Siddha Surgery)

ஆயுர்வேத மருத்துவ சபையில்
வைத்தியர்களாக பதிவு செய்வதற்கும்,
சித்த மருத்துவ மாணவர்களுக்கும்
பரம்பரை மருத்துவ அறிவை வளர்ப்பதற்கும்
வழிகாட்டும் நூலாகும்.

வைத்தியகலாநிதி
**கணேஷ் ஸ்ரீதரன்**

யாழ்ப்பாணம்
2010.

# பரம்பரை மருத்துவம்

## பாகம் - II

## (சித்த மருத்துவ சத்திர சிகிச்சை முறைகள்)

ஆயுர்வேத மருத்துவ சபையில்
வைத்தியர்களாக பதிவு செய்வதற்கும்,
சித்த மருத்துவ மாணவர்களுக்கும்
பரம்பரை மருத்துவ அறிவை வளர்ப்பதற்கும்
வழிகாட்டும் நூலாகும்.

**வைத்தியகலாநிதி கணேஷ் ஸ்ரீதரன்**
**B.S.M.S (SL), M.Phil (Jaffna)**
பரம்பரை மருத்துவர்

யாழ்ப்பாணம்
2010.

# அணிந்துரை

சங்ககாலத் தமிழ் இலக்கியங்களில் வானவர் மருத்துவம், மாக்கள் மருத்துவம், அசுரமருத்துவம் ஆகிய மூன்று பிரிவுகள் பற்றி சிறப்பாக விபரிக்கப்பட்டுள்ளது. நோயாளர்களின் உபாதைகளை முதல் இரு பிரிவுகளிலும் சிகிச்சிக்க முடியாத பட்சத்தில் அசுர மருத்துவம் (Surgery) தீர்வாக அமைந்தது. இதனை திருமுக்கூடல் கையேட்டிலும் காணக் கூடியதாக உள்ளது.

சித்த மருத்துவத்தின் தந்தையாகிய அகஸ்தியர் முக்கிய சத்திர சிகிச்சை நிபுணராக கி. மு. 12ம் நூற்றாண்டு இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. "அகஸ்தியர் ரண பெரு நூல்" "அகஸ்தியர் நயணவிதி" போன்ற நூல்கள் இதனை சான்று பகிர்கின்றன. மேலும் "நாகமுனி நயனவிதி" "தேரையர் தரு" போன்ற நூல்களும் சித்த மருத்துவத்தில் சத்திரசிகிச்சை பற்றி நன்கு விபரிக்கின்றது. அது மட்டுமன்றி சத்திர சிகிச்சை விசேட நிபுணர்களாக தேரையர் தலை நோய் சம்பந்தப்பட்ட சத்திர சிகிச்சையிலும், அகஸ்தியர் கண் நோய் சத்திரசிகிச்சையிலும் விசேடத்துவம் வாய்ந்தவர் என்பது குறிப்பிடத்தக்கது.

சித்தர்கள் சத்திரசிகிச்சை ஆயுதங்களைத் தயாரிப்பதில் தமது புராதன உலோக விஞ்ஞான அறிவையும் ரசவாத கலையையும் பயன்படுத்தி செப்பு, வெள்ளி போன்ற சிறப்பான உலோகங்களில் ஆயுதங்களைத் தயாரித்து சத்திரசிகிச்சைகளை மேற் கொண்டனர். இன்றைய விஞ்ஞான ரீதியான அணுகு முறையில் இவ் உலோகங்கள் நுண்ணுயிர்க் கொல்லி தன்மை கொண்டவை என்பதை அறியக் கூடியதாக உள்ளது.

இன்று சித்த மருத்துவ பட்டதாரிகளுக்கு வழங்கப்படும் Bachelor of Siddha Medicine and Surgery எனும் வார்த்தை பலரைக் கேள்விக் குறிகளாக்குகிறது. ஆகவே இந் நிலையில் "பரம்பரை மருத்துவத்தில் சித்த மருத்துவ சத்திர சிகிச்சை முறைகள்"

எனும் நூலின் வெளியீடு காலத்தின் கட்டாயமாகும். என்பதில் இரு வேறு கருத்து இருக்க இடமில்லை.

இந்நூலை ஆக்கிய சித்த மருத்துவ கலாநிதி கணேஸ் ஸ்ரீதரன் அவர்கள் இச் சிறிய நூலில் பல பெரிய கருத்துக்களை தெளிவாகக் கூறியுள்ளார். அதாவது பரம்பரை மருத்துவ சத்திர சிகிச்சையில் ஆயுத பிரயோகங்கள், இயந்திர பிரயோகங்கள், படங்களுடன் கூடிய நோய் நிலைகளும் சிகிச்சை முறைகளும் உள்ளடக்கியுள்ளது சிறப்பம்சமாகும்.

இவ்வுழைப்பு இத்துடன் முடியாமல் மீண்டும் தொடர்ந்து அநேக சுவடுகளை சித்த மருத்துவத்தில் பதிக்க எனது வாழ்த்துக்கள்.

**வைத்தியகலாநிதி நா. வர்ணகுலேந்திரன்**
சித்தமருத்துத்துவ பிரிவுத் தலைவர்,
சித்தமருத்துவத்துவப்பிரிவு,
கிழக்குப் பல்கலைக்கழகம்,
திருகோணமலை.

15.07.2010

# என்னுரை

யாழ்ப்பாணத்தில் சித்தமருத்துவத்தில் பரம்பரை மருத்துவ முறைகள் சிறப்பாக இருந்தன. இவற்றில் கண்வைத்தியம், சர்மரோகம், கர்ப்பரோகம், விஷவைத்தியம், முறிவுநெரிவு, கட்டுவைத்தியமும் இரணசிகிச்சையும், குழந்தை வைத்தியம், மானசீகரோகம் எனப் பல்வேறு வைத்திய முறைகள் தனித்துவம் பெற்று விளங்கின. இவ்வைத்திய முறைகள் குடும்ப வைத்திய முறையாக தங்களுக்குள்ளே வைத்திருந்தும், கவனிப்பாரற்றும, பிறருக்கு சொல்லிக் கொடுக்காமலும் இருந்ததால் இம்மருத்துவ முறைகள் அழிந்து விட்டன.

சில புத்தகங்களிலிருந்தும், சில கையெழுத்துப் பிரதியிலிருந்தும், ஏடுகளிலிருந்தும் இயன்றளவு முழுமையாக்கி மாணவர்களின் பாடத்தேவையை பூர்த்தி செய்ய இந்நூல் உருவாக்கப்பட்டுள்ளது.மேலும் இந்நூல் உருவாக்குவதற்கு எனது தந்தையாரிடம் கற்றுக்கொண்ட கட்டு வைத்திய அறிவு பெரிதும் உதவியுள்ளது. அத்துடன் இந் நூலுருவாக்கத்திற்கு தரவுகளைச் சேகரித்தல், களப்பணி, தொகுப்பு என்பன முக்கிய பங்கு வகித்துள்ளது. இது ஒரு ஆரம்ப முயற்சியாதலால் முற்றுப் பெற்றதெனக் கூறமுடியாது. இவ்வைத்திய நூல்கள் ஆரம்பத்தில் இருந்து பல பதிப்புகளாக மாறி வரவேண்டிய இக்கால சூழ்நிலையில் முதல் பதிப்பாகவோ அல்லது இரண்டாம் பதிப்பாகவோ வெளிவருவது சித்தமருத்துவ வளர்ச்சி எங்கிருக்கிறது என நீங்களே அறிந்து கொள்ள முடியும். அந்த வகையில் இம்மாதிரி நூல் வெளிவருவது காலத்தின் கட்டாய தேவையாகும். தற்காலத்தில் மருத்துவம் ஆய்வுக்குட்படுத்தப்பட வேண்டிய நிலையில் எமது பிரதேசத்திலுள்ள மருந்துகள் எல்லாம் நூலுருக்களாக மாறவேண்டும். அப்போது தான் அம்மருந்துகளை ஆய்வு செய்ய முடியும். இந் நூலை சிறப்பாக அச்சமைத்துத்தந்துதவிய ஸ்ரீ சாயி பிறிண்டேர்ஸ், அணிந்துரை வழங்கிய சித்தமருத்துவ தலைவர் ந. வர்ணகுலேந்திரன் அவர்களுக்கும் எனது நன்றிகள் உரித்தாகுக. சித்த மருத்துவ அபிமானிகள், பரம்பரை மருத்துவர்கள் தம்மிடம் உள்ள மருந்துகளை வெளிவிட வேண்டும், அல்லது எனக்கு அனுப்பி வைத்தால் அடுத்த பதிப்பில் நிறைவு செய்யலாம் எனக்கருதுகின்றேன்.

க. ஸ்ரீதரன்
58, கே. கே. எஸ் வீதி
கொககுவில்.

01.07.2010

நூல் :- பரம்பரை மருத்துவம்

ஆசிரியர் :- வைத்தியகலாநிதி. கணேஷ் ஸ்ரீதரன்

முகவரி :- 651 கே. கே. எஸ் வீதி, யாழ்ப்பாணம்.

பதிப்பு :- முதல் பதிப்பு

பிரதிகள் : 200

பதிப்புரிமை :-ஆசிரியருக்கு

அச்சுப்பதிப்பு :- ஸ்ரீ சாயி பிறிண்டேர்ஸ், 1227 கே.கே.எஸ் வீதி, யாழ்ப்பாணம்.

விலை : 350.00

பதிவிலக்கம் : ISBN 978-955-52588-2-1

## பொருளடக்கம்

# அறுவை மருத்துவம்

உள்மருந்துகளினால் தீரா நோய்க்கூட்டங்களை அகற்றுவதற்கு ஆற்றலுடையது அசுரமருத்துவமாகும். அவையாவன

1. சுத்தி முதலிய அறுவைக் கருவிகளைக் கொண்டு செய்யும் பரிகாரம்.

2. சுட்டிகை போன்ற நெருப்புப் பிரயோகத்தினால் நோயைப் போக்கும் ஆற்றல்.

3. காரமருந்துகளினால் நோயைப் போக்கும் ஆற்றல். இவ்வாறு 3 பெரும் பிரிவுகளில் அசுரமருத்துவம் அடங்குகிறது.

1. அறுவைத் தொழிலில் பின்வருவன அடங்கும். அவையாவன
   01. அறுவை
   02. கீறல்
   03. குருதிவாங்கல்
   04. அட்டைவிடல்
   05. சலாகையிடல்
   06. வர்த்தி
   07. ஊதல்
   08. பீச்சல்
   09. உறிஞ்சல்
   10. கொம்புகட்டல்
   11. முறிச்சல்
   12. தொக்கணம்
   13. கட்டுதல்

2. அக்கினியில் பின்வருவன அடங்கும்
   1 .சுட்டிகை
   2. வேது
   3. ஒற்றடம்

4. பொட்டணம்
5. புகை

3. காரத்தின் கீழ் பின்வருவன அடங்கும்
   1. காரம்
   2. சீலை
   3. களிம்பு
   4. பொடி
   5. நீா்
   6. களி
   7. பசை

இங்கு நோய்க்குப் பரிகாரம் செய்யுமிடத்து உள்மருந்துகளினால் பரிகாரம் செய்து பின் அறுவை, காரம், அக்கினி பரிகாரங்களைச் செய்யவேண்டும்.

அறுவையில் அறுவைக் கருவிகளினால் அறுக்க வேண்டியவற்றைஅறுத்து நோயை குணப்படுத்த உதவுவது ஆகும். காரம் (சாரம்)முதலியவற்றைக் கொண்டு கட்டி,மூலம், சதைவளா்ச்சி முதலியவற்றை கரைக்க உதவுவது காரசாரப் பிரயோகமாகும். சுட்டிகை போன்ற நெருப்புப்பிரயோகத்தினால் நோயைக் குணமாக்க உதவுவது அக்கினிப்பிரயோகமாகும். கீறுதற்கேற்ப கருவியைக் கொண்டு நன்றாகப் பழுத்த கட்டிகைகளை அல்லது இரத்தக்குழாய்கள் முதலியவற்றை கீறிச் சீழ் அல்லது இரத்தத்தை முறையே வெளிப் படுத்த உதவுவது கீறல் எனப்படும்.

உணவு, ஆகாரம், நடத்தை ஆகியவற்றால் உடலில் நோயுண்டாகுமிடத்து 7 உடற்தாதுக்களும் ஒன்றன்பின் ஒன்றாக பாதிக்கப்படும். இவற்றுக்கு ஆரம்ப கட்டத்தில் வாந்தி, பேதி, வியா்வையை உண்டாக்கல், சலத்தை வெளியகற்றல் போன்ற செயற்பாடுகளால் நோயிற்குரிய ஆரம்ப சிகிச்சையை மேற்கொள்ளலாம். குருதி போன்ற உடற்தாதுக்கள் தோஷமடைந்திருப்பின் அக்குற்றமுள்ள குருதியை வெளியேற்ற வேண்டும். இவ்வாறு வெளியேற்றும் முறைகள்

1. அட்டைவிடல்

2. கொம்புறிஞ்சல்
3. குருதிவாங்கல்

குருதி வாங்கல் எனும் போது உடலில் கீறி இரத்தத்தை வெளிப்படுத்தும் முறையாகும். இம்முறையில் பைத்தியம், விடாத தலைவலி, கண்ணோய், காதுநோய். நாக்குநோய், சூலை, பக்கசூலை, ஏறண்டம், கண்டமாலை, யானைக்கால், கணுக்கால் வீக்கம், நரித்தலைவாதம், முடக்குவாதம், இடுப்புவலி, குருதித்தீ, குருதிவளி, அரசப்பிளவை, சொறி ஆகிய நோய்களுக்குச் செய்யலாம். இளைப்புநோய், காசம், சுரம், காக்கைவலி, இரத்தச்சோகை, காமாலை, பயந்தவர்கள், வெறிநோய், குழந்தைகள், கிழவர்கள் போன்றவர்களுக்கு செய்யக்கூடாது. நஞ்சுக்கடியினால் உயிர்க்கு ஆபத்து நேரிடும் தறுவாயில் இம்முறையைக் கையாளலாம்.

## குருதி கேடைந்த நிலமையை அறிதல்

கட்டிகள், நமைச்சல், சொறி எரிச்சல் ஆகிய குறிகள் காணப்படும். குருதியை வெளிப்படுத்தும் போது குற்றத்திற்கு தக்கவாறு சில குறிகள் காணப்படும்.

1. வளி மிகுதியாகவிருந்தால் குருதியானது கறுப்பு நிறமாகவும், நுரை பொருந்தியதாகவும், இலேசானதாகவும், நீற்றுப்போய் சுறுசுறுப்பாக பாயக்கூடியதாகவும் இருக்கும்.

2. அழல் குற்றம் கலந்திருப்பின் மஞ்சளுடன் நீலமும் பச்சையும் கலந்த நிறத்தையொத்ததாகவும் நாற்றமுடையதாகவும் இருக்கும்.

3. ஐய மிகுதியாகவிருந்தால் இரத்தம் தடித்து தோய்ந்து போய் வழவழப்பு அதிகரித்தும் வெண்மை நிறம் பொருந்தியிருக்கும்

மேகம், கார் மூட்டமான காலத்திலும், காற்று வீசும் காலத்திலும், குளிர்ச்சியான காலத்திலும், குருதிக்குழாயைக் கீறக்கூடாது. ஏனெனில் குருதி சரிவர வெளியாகாது. அவ்வாறு

வெளிவந்தாலும் விரைவில் உறைந்து விடும். இதனால் எதிர்பாத்த வாறு குருதி வெளியேறாது.

## குருதிக் குழாயைக் கீறல்

கீறக்கூடிய குருதிக்குழாயை நன்றாக புடைத்து வெளித்தோன்றுமாறு செய்ய வேண்டும். (இதற்கு கட்டுப்போடல் நல்லது) பின் நோயாளியை வசதியாக இருக்கவோ, கிடத்தியோ செய்து பின் குருதிக்குழாயைக் கீறவேண்டும். கீறுவாயானது கோணலின்றி நேர்மையாகவும், ஒரேயாழமுள்ளதாகவும், அதிகம் தாழ்ந்து இல்லாமலும் கூர்மையான கூர்மையான சவரத்தால் (கத்தி) கீறவேண்டும். இதில் அதிகளவில் பெருத்தோ அல்லது சிறுத்தோ காயம் இருக்கக்கூடாது. ஏனெனில் குருதி அதிகளவில் வெளியேறவோ அல்லது வெளியேறாமல் விட்டாலோ சிகிச்சை சரியாக நடைபெறமாட்டாது. மிகுதியாக வெளியேறினால் நீர்வேட்கை, மூர்ச்சசை, மயக்கம், ஆகிய குணங்கள் தோன்றும். எனவே இவ்வாறு அதிகமாக வெளியேறினால் குருதிவெளியேறும் குழாயை அழுத்துவதனால் பெரும்பாலும் குருதி வெளிவருவது நின்றுவிடும். வெளிமருந்தாக குருதி வெளியேறும் நிலையை கட்டுப்படுத்தும் மருந்துகளை அதாவது துவர்ப்புச்சுவையுடையவற்றை உபயோகித்தல். இதனால் நிவாரணம் கிடைக்காவிட்டால் சுட்டிகை செய்யலாம். அத்துடன் இரத்தப்பெருக்கை கட்டுப்படுத்தக்கூடிய உள்மருந்துகளைக் கொடுத்தல். கீறுவாயில் உண்டாகும் புண்ணைக்குணப்படுத்த மாசிக்காய், காசுக்கட்டி, களிப்பாக்கு, கடுக்காய், படிகாரம் போன்ற துவர்ப்புள்ள பொருட்களின் தூள்களைத் தூவி தொற்றில்லாத துணியினால் கட்டவேண்டும். இங்கு குருதியில் உள்ள குற்றங்கள் சரிவர வெளிப்படமுன் நிறுத்தப்படும் காயங்கள் விரைவில் ஆறமாட்டாது.

## அட்டைவிடல்

அட்டையானது உடலில் உள்ள நஞ்சுநீரைப்பருகி இரத்தத்தை தூய்மைப்படுத்துவதனால் பிரயோகிக்க காரணமாகிறது.

சிறந்த அட்டைக்கு 5 தோல்கள், 3 பற்கள் உண்டு. அதன் இரு பக்க ஓரங்களும் தடித்திருக்கும்.

அட்டைகளை கழுத்தில் விம்மிக் காணும் இரத்தநாளத்திலும், நாடி உணரப்படும் வீக்கங்களிலும் விடலாகாது. மிக நுட்பமான இடங்களான கண்மடல், ஆண்குறியின் மேற்புறத்தோல், விதை, முலை ஆகிய இடங்களில் கவனமாக விடவேண்டும்.

அட்டைவிடுவதற்கு முன் நோயாளிக்கு முறைப்படி வாந்திக்கும், பேதிக்கும் கொடுத்து வியர்வையுண்டாக்கக்கூடிய முறைகளையும் செய்ய வேண்டும். அட்டைவிடும் நாளில் தக்களவு உணவு கொடுத்து தூங்கவிடாமல் பார்த்து பிற்பகலில் விடவேண்டும். பின் அட்டைவிடவேண்டிய இடத்தை துப்பரவு செய்து அட்டை விடுவதற்கு முன் அவ்விடத்தில் காவி மண்ணை ஈரமாகப்பூசி, எவ்விடத்தில் குற்றமதிகம் இருக்கிறதென அறிந்து அட்டை விடல் நலம்.

பிற்பகல் அட்டைவிடல் நன்று. எனினும் குழந்தைகட்கு காலையில் விடல் நன்று. ஏனெனில் இரவில் குழந்தையோ அல்லது பாதுகாவலரோ தூங்க நேரிட்டால் இரத்தஇழப்பை கண்டுகொள்ள முடியாது.

**அட்டை விடல்**:- வீங்கியாவது, கடினமாயாவது நோயுடன் கூடி இருக்கக்கூடிய இடங்களையறிந்து அட்டையை விடல் வேண்டும். அல்லது நீர் நிறைந்த ஒரு சிறு குடுவையில் ஓரட்டையை விட்டு அக்குடுவையின் வாயை விடவேண்டிய இடத்தில் கவிழ்த்து நீர்வெளிப்படாவண்ணம் பிடித்தல் வேண்டும். அப்போது அட்டை நோயுள்ள இடத்தைப்பற்றிக் கொள்ளும். இவ்வாறு செய்தும் அட்டை பற்றிக்கொள்ளாவிட்டால், அதனை ஒரு சுத்தமான வெண்துணியில் எடுத்து விட்டுப், பிறகு விட்ட இடத்தை மறுபடியும் துடைத்துப் பாலைத்தடவி அதன்மேல் அட்டையை விட அது பற்றும். இவ்வாறு செய்தபின்னரும் பிடிக்காதிருப்பின் விடவேண்டிய இடத்தை சிறு கத்தியால் மேலாகக் கீறிவிட குருதி சற்றே கசியும். அவ்வாறு கசிகின்ற குருதியை அவ்விடத்திலே தடவிவிட்டு அதன் மேல்

அட்டையை விட விரைவில் பற்றிக் கொள்ளும். அட்டை கடிக்கும் போர்து ஈரத்துணியை அதன் மீது போட வேண்டும். இல்லையேல் ஈ மொய்ப்பதால் அட்டை குருதியை முறையாகக் குடிக்காது. அட்டை நன்றாகக் குருதியைக் குடித்துவிட்டதென்பதையறிந்து நீக்கிவிடவும். இயற்கையாக 1-2 நாளைக்குள் நல்ல அட்டை வேண்டியளவு குருதியை எடுத்துவிடும். அதன் பின் தானாக விழுந்துவிடும். முழுமையாகக் குடித்த பின்னரும் கவ்விப் பிடித்திருக்குமாயின் கடிவாயில் காடிநீா அல்லது பொடி செய்த உப்பைத்தூவ வேண்டும். இவ்வாறு செய்ய அட்டை விழுந்து விடும். குருதி குடித்தெழுந்த அட்டையைத் தவிட்டிலிட்டு புரட்ட வேண்டும். பின் பொடி செய்த எள்ளை அதன் வாயில் தேய்க்க வேண்டும். அதன் பின் நீரில் விட்டு குருதி வெளிவரும்படி செய்தல் வேண்டும். பின் அதை புற்றுமண் கரைத்த தெளிநீரில் விட்டு வைத்தல் வேண்டும். பயன்படுத்திய அட்டையையும், பயன்படுத்தாத அட்டையையும் வெவ்வேறாக வைத்திருத்தல் வேண்டும்.

அட்டைவிடுதல் நிறைவேறியது என்பதை அறிய நோயாளி நோயின் உபத்திரவங்கள் நீங்கி காணப்படும் நிலமையாகும். அட்டையை சரியாக தொற்று நீக்காமல் பாவிப்பதால் நோயாளிக்கு காய்ச்சல், மயக்கம், வேதனை, அட்டைவிட்ட இடத்தில் எரிச்சல், நமைச்சல் உண்டாகி கடிவாயும் வீங்கும்.

குருதி நன்றாக வெளிப்படாவிட்டால் மீண்டும் அட்டையை விடலாம். ஆனால் நோயாளி மயக்கமுறின் நிறுத்த வேண்டும். அல்லாவிடில் சுடுநீா ஒற்றடம் இட கடிவாயினின்று குருதி வெளியேறும். அத்துடன் கடுமையாக வெளியேறினால் படிகாரப்பொடி அல்லது வெண்காரப்பொடி தடவி விடலாம். கடிவாய்ப்புண் ஆறுவதற்கு கற்றாழை சுட்டு பிளந்து அதில் மஞ்சட்தூள் சேர்த்து புண்ணில் வைத்து கட்டலாம்.

முதல் பாவித்த அட்டையை தற்காலத்தில் திரும்ப பாவிப்பது தவிர்க்கப்பட்டுள்ளது. திரும்ப பாவிப்பதற்கு விதி முறை திரும்ப திரும்ப பாவிப்பதால் அட்டை ஆறுதலின்றி நச்சுத்தன்மையடையும். ஆதலால் ஒரு முறை பாவித்த அட்டையை 7 நாட்களிற்குப்

பின்னரே பாவித்தல் வேண்டும். அட்டையை காவற்படுத்தும் போது 3-4 நாட்களுக்கு ஒரு முறை நீர் மாற்றப்படல் வேண்டும்.

அட்டைகள் மூக்கு, குதம், கருப்பை ஆகியவற்றில் சென்றால் அவற்றை வெளியேற்றுவதற்கு காடிநீர், உப்புப்பொடி தூவ வெளியேறும்.

அட்டைகளை சுரத்துடன் கூடிய மார்பு அல்லது வயிற்றுநோயில் நோய் காணுமிடத்தில் விடலாம். குருதி மூலத்தால் பாதிக்கப்பட்ட நோயாளிக்கு ஏற்படும் தலைவலிக்கு குதத்தில் அட்டையை விடலாம். கருப்பையில் ஏற்படும் சூதகவலியைத் தீர்ப்பதற்கு தொடையின் உட்புறத்தில் விடலாம். குழந்தைகளுக்கு ஏற்படும் கக்குவன் இருமலுக்கு முதுகுநடுவின் மேற்புறத்தில் அட்டையை விடலாம். அடிபட்ட வீக்கம், கட்டிகள், கிரந்தி, வீக்கங்கள் ஆகிய இந்நோய்களில் அட்டையை அவ்விடங்களில் விடலாம்.

## சலாகை

எலும்புகளில் உண்டாகக்கூடிய கட்டிகள், புரைகள், சிலைப்புண்கள், பவுத்திரம் போன்ற இரணநோய்களில் நோயின் நிலமையை ஆராய்ந்து அறிவதற்கு சலாகைகள் உபயோகப்படுகின்றன. இச்சலாகைகள் பெரும்பாலும் வெள்ளி, செம்பு இவற்றினால் செய்யப்படும். இவை முருக்குஇலையின் காம்பினது உருவத்தை ஒத்திருக்கும். முனைகள் மழுங்கியவையாக இருத்தல் வேண்டும்.

# சத்திர சிகிச்சை உபகரணங்கள்

யந்திரங்கள்

(1)

ஸ்வஸ்திக யந்திரங்கள்



காகமுக யந்திரம்
காக்கை அலகுபோன்ற கருவி



தரக்ஷுமுக யந்திரம்
சிவங்கிமுகம் போன்ற கருவி



ஸிம்ஹமுக யந்திரம்
(சிங்கமுகம் போன்ற கருவி)

ஸந்தம்ச யந்திரங்கள்



(இடுக்கிபோன்ற கருவிகள்)



கங்கமுக யந்திரம்
(கழுகு முகம் போன்ற கருவி )



முசுண்டீ யந்திரம்



ருக்ஷமுக யந்திரம்
(கரடிமுகம் போன்ற கருவி)





தால யந்திரங்கள்
(மீன் செதிள் போன்ற கூரிய முனையுடைய கருவிகள்)

நாடீ யந்திரங்கள் (2)



த்மாந நாடிகள்
ஒரு முக முள்ளது
இரு முக முள்ளது



கண்ட சல்யாவ லோகிநீ
தொண்டையிலுள் காணும் கருவி



பஞ்ச முக நாடீ
(ஐந்து தொளைகள் உள்ள குழாய் கருவி)

அர்சோ யந்திரங்கள்
மூல நோய்கருவி



ஒரு தொளையுடையது
இரு தொளையுடையது.



யோனிவ்ரணேக்ஷணம்
(வெண்குறி நோய் காணும் கருவி)



அலாபூ யந்திரம்
(சுரக் குடுக்கை போன்ற கருவி)



ச்ருங்க யந்திரம்
(மாட்டுக் கொம்பு போன்ற கருவி)

(3)

## சலாகா யந்திரங்கள்
(கம்பிகள் போன்ற கருவிகள்)



கண்டூபத முக சலாகைகள்
(மண்ணுளிப் பாம்பு போன்றது)



சரபுங்கமுக சலாகைகள்
(அம்புமுனை போன்ற கருவிகள்)



கர்ப்ப சங்கு
(கரு போன்றவற்றை அகற்றும் கருவி)



கர்ப்ப சங்கு
(மற்றொரு வகை)



சர்ப்ப பண யந்திரம்
(பாம்புப் படம் போன்ற கருவி)



மார்ஜந சலாகை
(புண் துடைக்கும் கருவி)



ஜாம்பவோஷ்ட சலாகை
(நாவல் கொட்டை போன்ற முனையுடைய கருவி)

(4)

வஸ்தி ய திரங்கள் அறுவை சிகிச்சைக் கருவிகள்



எண்ணெய் வஸ்தி
கஷாயவஸ்தி இடும் கருவி
(விவரம் 434 ம் பக்கத்தில்)



தந்த லேகநம்
பல் சுரண்டும் கருவி



உத்தர வஸ்தி யந்திரம்
ஆண்குறி பெண்குறிகளில்
வஸ்தி இடும் கருவி
(விவரம் 447 ம் பக்கத்தில்)



மண்டலாக்ரம்
கூர்மையான
முனை வளைந்த கத்தி





நாடி விரண யந்திரங்கள்
(துருத்தி அல்லது பையிணைத்த
நாடீ யந்திரங்கள்)



நீண்ட முனையுள்ள
வ்ருத்தி பத்ரம்
கூர்மையும் அகன்றும்
உள்ள கத்தி



வ்ருத்தி பத்திரம்
(மற்றொரு வகை)

## (6)



ஆடீ முகம்
வாத்து அலகுபோன்ற
கத்தி



குடாரி
கோடரி



அந்தர் முகம்
உட்புறம் முனையுள்ள
கத்தி



வ்ரீஹி முகம்
நெல் முனை போன்றது



சராரீ முகம்
நாரை அலகு போன்ற
கத்தி



ஸர்ப்பமுக சஸ்திரம்
பாம்புவாய் போன்ற கத்தி



கூர்ச்சம்
புருசு

சலாகா யந்திரம்



த்விமுக சலாகை
இரண்டு முகமுள்ள
ஊசி போன்ற கருவி

## (7)



வேதஸ பத்திரம்
நொச்சி இலை போன்ற
உருவமுடையது



ஆரா
அறுக்கும் கருவி



கர்ண வ்யதனம்
காது குத்தும் கருவி



காதுகுத்தும் மற்றொரு
கருவி

### ஊசிகள் (ஸூசீ)



ஸூசீ - 1



ஸூசீ - 2



ஸூசீ - 3



ஸூசீ - 4

(8)



( ஜலோதரயந்திரம் )

நீர்ப்பீலிகை நோயின்
நீரை வெளிப்படுத்தும்
கருவி



சமீ யந்திரம்

மூல நோய் முளையை
நசுக்கும் கருவி



அர்த்த சந்திரமுகம்

குடல் இறக்க நோயில்
பயன்படும் கருவி



அங்குலிசஸ்திரம்

விரலில் பொருத்திக்கொள்ளும்
கருவி



அங்குலித்ராணகம்

விரலைக் காக்கும் கருவி



த்ரி கூர்ச்சம்

மூன்று கம்பிகள் பொருத்திய
கருவி



பகந்தர யந்திரம்

பவுத்திர நோயில்
பயன்படும் கருவி



கூர்ச்சம்

தர்ப்பைகள் முடிச்சுப்போன்று
கம்பிகள் பொருத்திய கருவி

(9)

ஏஷணிகள்
(இரண ஆய்வுக் கருவி)





கண்டுபதமுக ஏஷணிகள்
மண்ணுளிப் பாம்பு போன்ற ஏஷணி



மற்றொரு வித ஏஷணி



நக சஸ்திரம்
நகம் அகற்றும் கருவி



ஸூசிமுக ஏஷணி
ஊசி முனை போன்ற கருவி



கஜம்
மூக்குக் குடையும் கருவி



படிசம்
தூண்டில் முள் போன்ற கருவி



கடயந்திரம்
பானை போன்ற கருவி



சஸ்திர கோசம்
சஸ்திர-யந்திரங்கள் வைக்கும் கருவிப்பெட்டி

(10)

## பந்தநம் (கட்டுவகைகள்)



கோச பந்தநம்
(பெட்டி போல் மூடும் கட்டு)



கோச பந்தநம்
ஸ்தகிதம் என்ற பெயரும் உண்டு



ஸ்வஸ்திக பந்தநம்
8 எண் போன்ற கட்டு





தாம பந்தநங்கள்
கயிற்றினால் சுற்றிக்கட்டுதல்



அநுவேல்லித பந்தநம்
(கொடிபோல் சுற்றிக் கட்டுதல்)

(11)






முத்தோலி பந்தநங்கள்
(முக்கோணக் கட்டுகள்)



கட்வா பந்தநம்
(மூலவாய்க்கட்டையை தூக்கிக் கட்டுதல்)



சீந பந்தநம்
(கூண் கட்டைப் போன்ற கட்டு)



விபந்த பந்தநம்
(அழுத்தமாக சுற்றிக் கட்டுதல்)

(12)




உத்ஸங்க பந்தநம்
( உறி போன்ற கட்டு )



ஸிராவ்யதை
முறைகள்



ஸிராவ்யதை முறைகள்
( காரி இரத்தத்தைக்
கீறி எடுக்கும் முறைகள் )



சிரோவஸ்தி
( மூடாத மேல்பக்கம் உள்ள
தொப்பி போன்றது )

(13)



விதாந பந்தநம்
(தலைக்குமேல் தொப்பிபோல் சுற்றிக் கட்டுதல்)



கோபண பந்தநம்
(கோவணம் போன்ற கட்டு)



பஞ்சாங்கி பந்தநம்
(கால்களில் பட்டைகள் வைத்து ௫ இடங்களில் சுற்றிக் கட்டுதல்)



இரண்டு கட்டுகளையுடையது யமக பந்தநம்



பலகை

01. கத்தி:- 15செமீ நீளம், அகலம் 2.5செமீ முனைவட்டம் மயிர்க்கத்தியைப் போன்றது.
02. சத்திரம்:- 15செமீ நீளம், வேப்பிலையைப்போல் பல்பல்லா யிருத்தல். நிறை 30கிராம். கட்டிகளை அறுக்க உதவும்.
03. குறும்பிவாங்கி:- 17செமீ, நிறை 3கிராம் கைபிடி மட்டும் 12செமீ.
4.முள்வாங்கி:- 15செமீ நீளம், 3செமீ அகலம், 4கிராம் நிறை இது அறுக்க, கீற, நகம் வாங்கவும் உபயோகமானது.
05. முகவாதனன்:- 30செமீ நீளம். 8கிராம் நிறை.
06. ஆழிக்கோல்:- 25செமீ நீளம், 15கிராம் நிறை.
07. பிறைக்கோல்:- 20செமீ நீளம், 15கிராம் நிறை எழுத்தாணிபோல் நீண்ட பிறைக்கோல் மத்தியில் விளங்கும்.
08. கத்தரிக்கோல்:- 22செமீ நீளம், 8கிராம் நிறை.
09. பரகரைவாங்கி:-40செமீ நீளம், 15கிராம் நிறை.
10. முச்சிலாகை:- 18செமீ நீளம், 20கிராம் 3 தகட்டு வாயுள்ளது.
11. முனிமொழி- இது முக்கிய கருவியாகும்.
12. ஓட்டுக்கோல்:- 28செமீ தலைமட்டம், தலையொழித்த பாகம் 5கிராம், 15கிராம் நிறை.
13. அட்டக்கோல்:- 45செமீ நிறை 20கிராம்
14. ஊசி:- 7செமீ
15. செப்புக்குழை:- 3செமீ நீளம், நிறை 15கிராம், தகடாலான திரட்சியான குழல், புண்ணில் விடுவது.
16. சலாகை:- 15செமீ நீளம், 60கிராம் நிறை. புரையோடிய புண்களின் நிலமையை அறிவதற்கு உபயோகமானது.
17. வட்டமுகை:-
18. பஞ்சமுகம்:-
19. செப்புச்சிலாகை:-
20 கொம்பு:- 25செமீ நீளம், காளை மாட்டின் கொம்பிற்கு அடிப்பாகத்தில் பித்தளையினால் ஆன பூண் போன்றது. வாழையின் குருத்துப்போல் பூண் 25செமீ குருதி கட்டப்பட்டிருக் கும். சரீரவீக்கம், கட்டி இவைகளைக் கீறி இரத்தைக் கொம்பு வைத்து வாயினால் உறிஞ்ச உதவும்.
21. குடோரி:- 18செமீ, 7கிராம் நிறை

22. வெண்கலக்குழல்:- 20செமீ, நிறை 50கிராம்.
22. வெண்கலக்குழல்:- 20செமீ, நிறை 50கிராம்.
23. ஈயச்சலாகை:- 7செமீ நீளம், 20கிராம் நிறை. வாதம், கிருமி, பிளவை இவற்றைக்குணப்படுத்துவது.
24. காயக்கோல்:- 18செமீ நீளம், பருமன் 5செமீ, நிறை10கிராம்
25. தண்டுச்சலாகை:- 23செமீ, 7.5கிராம் நிறை. ஈர்க்குகனம்.
26. நயனசுத்தி:- 8செமீ நீளம், 5கிராம் நிறை, ஊசி போன்ற முனையுள்ளது. (முனையில் புளியிலை கனம் விட்டு மற்ற பக்கமெல்லாம் நூலால் சுற்றப்பட்டுள்ளது.)

**வர்த்தி வைத்தல்**:- பவுத்திரம், சிலைப்புண் இவற்றின் துளைகளைப் பெரிதாக்கும் பொருட்டும், கெட்ட தசைகளையறுத்து வெளிப்படுத்தும் பொருட்டும், பெரும்பாலும் மருந்துப் பொருட்களைக் கொண்டு செய்த திரிகள் உபயோகிக்கப்படும். இத்திரிகள் புண்களின் வன்மைக்குத் தக்கவாறு பெரிதாகவும், சிறியதாகவும் அமைக்கப்படும். விரணங்கள் அன்றி, குதம், மூக்கு, செவி இவ்விடங்களிலும் வர்த்தி வைக்கப்படும். கீழ்வாயில் வைக்கும் வர்த்தியானது மலத்தை வெளிப்படுத்தும் பொருட்டாவது குருதிக்கழிச்சல், மூலம், இப்பிணிகளில் வெளிப்படுங் குருதியை நிறுத்தும் பொருட்டாவது உபயோகிப்பதுண்டு. மலத்தை வெளிப்படுத்த இந்துப்பு, தேன் சேர்ந்து வர்த்தி செய்து வைக்கப்படும்.

**ஊதல்**:- சிறு துவாரத்தையுடைய குழாய்களின் வாயிலாகப் பொடி, மூலிகைச்சாறு இவற்றை விரணங்கட்கும், மூக்கு, காதுகளிற்கு செலுத்துதல்.

**பீச்சல்:-** பீச்சுக்கருவியினால் நீர்களைப் புண்களில் பீச்சிக் கழுவும் முறையாகும். அது மட்டுமன்றி வேறு காரணங்களுக்காக நீரை நுண்ணிய துளிகளாக உடலில் செலுத்தம் முறையும் பீச்சு எனப்படும்.

**உறிஞ்சல்:-** உடலின் எப்பாகத்திலும் நீர், சீழ், வேறு பொருள்கள் உடலினுட் சென்றிருக்கையில் அவற்றையுறிஞ்சி வாங்கும் முறை.

**கொம்பு கட்டல்:-** உடல் உறுப்புகள் தன்னியற்கையமைப்பிலும் விலகிவிடுங்கால் அவைகளைச் சரிவர அமைத்துப் பொருத்த முள்ள கொம்புகளால் கட்டி அவை மறுபடியும் விலகாவண்ணம் பரிகரிக்கும் முறையையே கொம்புகட்டல் எனப்படும். பிசகிய அல்லது ஒடிந்த உறுப்புகளின் தன்மைக்கு ஏற்ப இக்கொம்பு களின் அமைப்பும் வெவ்வேறாகும்.

**முறிச்சல்:-** எலும்புகள் ஒடிந்த பின் கோணலாகவும் அல்லது அவற்றின் அமைப்புக்கு விகாரமாகப் பொருந்தியிருப்பின் அவற்றைச் சரிவர அமைக்கும் முறையில் முறிச்சல் பிரயோகம் கையாளப்படும்.

தொக்கணம்:- இதுவே மர்த்தணம் எனப்படும். வளியால் உண்டாகக்கூடிய நோய்கள் எல்லாவற்றையும் நீக்குவதற்கு இது பயன்படும். இதன் செயல்பாடு 9 வகையாகும்.
தட்டல், இறுக்கல்,பிடித்தல், முறுக்கல், கைகட்டல்,அழுத்தல், இழுத்தல், மல்லாத்துதல், அசைத்தல்.

01. கட்டுதல்:- குத்தல் என்றும் சொல்லாம். இதனை உடலின் எல்லாப் பாகத்திலும் செய்யலாம். 3 வகை. மந்தம், மத்திமம், சண்டம் எனப்படும். இதனை திங்கட்கொருமுறை செய்தல் நன்று. தட்டுதலை நிற்க வைத்தும், நடக்க வைத்தும், குந்த வைத்தும். மல்லாந்து படுக்க வைத்தும், ஒரு பக்கம் சரிவாகப் படுக்க வைத்தும் செய்யலாம்.

02. இறுக்கல்:- முற்கூறிய நிலைகளில் நடத்தைத் தவிர்த்து மற்ற நிலைகளிலும் செய்யலாம். நீண்ட எலும்புகள் பொருந்திய உறுப்புகளுக்கு இறுக்கலாகாது.

03. முறுக்கல்:- முற்கூறிய 5 நிலைகளுள் படுக்கும் போதும், நடக்கும் போதும் செய்யலாகாது. எலும்புகள் பொருந்திய இடங்களிலும் செய்யவெண்ணாது நோயாளிக்கு விருப்பமில்லாமல் செய்தலாகாது. முகமன் வார்த்தைகளைக் கூறி தைலத்தை தடவி முறுக்கினும் குணடடையாது.

04. பிடித்தல்:- தைலம் தடவியாவது, தடவாமலாவது பிடிக்கலாம். தட்டுவதற்குரிய 5 செயல்களையும் செய்யலாம். இது வாதநோய்களில் சிறப்பாக பாரிசவாயு, தனுர் வாதம் போன்றவைக்கு சிறந்தது.

05. கைகட்டல்:- நிற்கும் போது, குந்தியிருக்கும் போது, மல்லாந்து படுக்கும் போது ஒரு பக்கம் சரிந்து படுக்கும் போதும் இதைச் செய்யலாம். நடக்கும் போது செய்யலாகாது. இவ்வாறு செய்தால் பழு என்புகள் முறிந்து விடும். உடகார்ந்து இருக்கையிலே செய்வது சிறந்தது. தைலம் சேர்த்து செய்தால் நற்பலன் கிடைக்கும். முடக்கி வைத்திருக்கும் வாதநோய்களுக்கு சிறந்தது.

06. அழுத்தல்:- நிற்கும் போதும், குந்தியிருக்கும் போதும் இதனைச் செய்யலாம். கணைக்கால், விலாப்பக்கம், தலை இவ்விடங்களில் செய்தலாகாது. இடுப்பில் நன்றாக அழுத்தலாம். இது உட்வீச்சு. புறவீச்சு, பக்கஇசிவு போன்றவற்றிற்கு சிறந்தது.

07. இழுத்தல் அல்லது உருவுதல்:- இதை தைலத்தை பூசியே செய்ய வேண்டும். மல்லாந்து படுத்திருக்கும் போதும், உட்கார்ந்த நிலையிலும் இதனைச் செய்தலாகாது. எலும்புகள் நன்றாய்த தெரியுமிடத்திலும், தலையிலும் உருவும் போது மிகவும் மந்தமாகச் செய்தல் வேண்டும். இதனால் நரம்பில் ஊறி வருத்துகின்ற வாயுக்கள், பிடிப்புகள், சுளுக்குகள் குணமாகும்.

08. மல்லாத்துதல்:- உட்காந்திருக்கும் போது செய்யக்கூடியது. இதை மந்தம், மத்திமம், சண்டம் எனக்கூறும் அளவில் செய்தல் வேண்டும். இங்கு உடம்பை நன்றாய் வளைக்கும் போது முற்புறமாகவும்பிற்புறமாகவும் கால்கள் செவியில் படுமாறு செய்ய வேண்டும். அதனால் கபம் தன்னிலைப்பட்டு தூல, மலட்டு நோய் தீரும்.

09. அசை தல்:- இதை முற்கூறிய 5 நிலைகளிலும் செய்யலாம். ஆனால் நடக்கும் போது செய்தலாகாது. இதை தைலம் பாவித்து செய்யும் போது விசேட பலன் கிட்டும். உடற்கடுப்பு, திமிர் தீரும்.

தொக்கணமுறையில் வாதநோய்கள் உள்மருந்தின்றி நீங்குவதாக கூறுவார்கள்.

கட்டுதல்:- இலைகளையாவது, பட்டைகளையாவாது,சில பறவைகளையாவது நைய இடித்தோ, அரைத்தோ,வதக்கியோ, புளித்த நீர் முதலியவற்றில் வேக வைத்தோ கட்டுதல் ஆகும். இதைவிட பாஷாணமெழுகு முதலியவற்றைக் கொண்டு கட்டுதலுமுண்டு.

## சுட்டிகை

சிட்டிகை, இராசசிட்டிகை என்றும் சொல்லாம். சுட்டிகை நோய்களைப் போக்குவதற்குரிய மருந்து முறைகளிலொன்று. (கெட்டுப்போன பொருள்களை நெருப்பிலிட்டு வாட்டி அவற்றை எவ்வாறு பதப்படுத்துகின்றாமோ, அவ்வாறு மிகுதியும் நலிக்கக்கூடிய சேத்துமம் முதலிய பிணிகளைச் சுட்டிகையினால் வாட்டி உடலை வன்மை பெறச் செய்தல்)

உலோகம், மரம், மண், கால்,காந்தி, உலோகம் என்பதில் பஞ்சலோகங்களும் அடங்கும். இவற்றிலொன்றால் செய்யப்பட்ட கம்பி போன்ற கருவிகளால் சுட்டிகையிடுவது வழக்கம். இதை உச்சி,நெற்றி, நெஞ்சு, கால்கள் இவற்றில் இடலாம். மரச்சுட்டிகைகளில் பெரும்பாலும் வேர்களே பயன்பட்டு வருகின்றன. மஞ்சல் கொம்புக்கு சூடேற்றி சற்று ஆற்றி சுடவேண்டிய இடத்தின் மீது வைத்து விட வேண்டும். இதில் சன்னிவாதநோய்க்கு நாசியின் அடித்தண்டிலும், பற்கிட்டும் சன்னிநோய்க்கு மேலுதட்டின் மேற்பள்ளம், கபநோயில் கீழுதடு, விரண, சிலேத்துமநோய்களில் புருவங்களின் மேற்புறமும், அண்டவாயுவுக்கு , விதைவீக்கத்திற்கு ஆண்குறியின் மேல் பக்கம், சூலை, குன்மத்திற்கு மார்பின்கீழ், பாண்டுநோய்கள் காற்பரடு ஆகியவற்றில் இடலாம்.

உலோகங்களைக் கொண்டு சுடும் சுட்டிகையில் நோயின் குற்றங்கள் அதிகளவு பெருகியிருப்பின் கையாள வேண்டும்.

மண் சுட்டிகையானது எண்ணெய் பழகிய மட்குடுவையை நெருப்பிலிட்டுச் சூடாக்கித் துணியில் பிடித்துக் கொண்டு உச்சி, நெற்றி,முதுகு, மார்பு, கால் இவற்றின் மேல் நொச்சியிலையைப் பரப்பி அதன் மேல் அக்குடுவையை வைக்க சன்னி, விடசுரம், பிடிப்பு, தாகம், வலி, ஒற்றைத்தலைவலி நீங்கும். கால்சுட்டிகையில் வெப்பமிகுந்த காற்றை உடலிறங்கும்படி செய்யும் முறை. இதனால் வியர்வையுண்டாக்கி நோய் குணப்படும். காந்திசுட்டியில் வெயிலில் காய்தலைக் கூறுவர். தலையைத்தவிர மற்ற உறுப்புகள் வெயிலில் காயலாம்.

# இயந்திரவிதி

இயந்திரவிதி எனப்படுவது மருந்துகளைப் பிரயோகிப்பதற்கும், சத்திரசிகிச்சையில் அவயவங்களைப் பாதுகாக்க உபயோகிக்கும் கருவிகளையும் அதன் பிரயோகமுறைகளை விபரிப்பதாகும். அவயவங்களில் பிரவேசித்து துன்பமளித்துக் கொண்டிருக்கும் சல்லியங்களை வெளிப்படுத்த உதவுவதும், சில நோய்களை இனங்காணவும், சாரம் முதலிய காரச்சீலை பிரயோகத்திற்கு ஏற்றதாகவும், இதனால் அருகில் உள்ள அவயவங்களுக்கு தீங்கு ஏற்படாது பாதுகாப்பதும், வஸ்தி சிகிச்சையை மேற்கொள்ள உதவ்வதும் ஆன கருவிகள் இயந்திரங்கள் எனப்படும். இயந்திரங்களை கணக்கிட முடியாது.

எனினும் சுவஸ்திக இயூந்திரம், சம்நம்ச இயந்திரம், தாளஇயந்திரம், நாடிஇயந்திரம், சலாகா இயந்திரம், உபஇயந்திரம் என ஆறு வகையாக பிரிக்கின்றனா்.

1. **சுவஸ்திக இயந்திரங்கள்** காக்கை, சிங்கம், பருந்து, கரடி போன்ற பிராணிகளின் முக அமைப்பைக் கொண்டவை. ஒரே பெயரால் அழைக்கப்படுபவை. அநேமாக இரும்பினால் செய்யப்பட்டு 50செமீ நீளமுடையவை. அவற்றின் நுனிப்பகுதி பயறு போல் இருக்கும். கழுத்தில் சிறு உடலைப்போல் வழுமூண்ட முனைகளைப் பெற்ற கீலங்கள் இணைக்கப்பட்டும் அடிப்பகுதி ஈட்டியைப் போன்று வளைந்த பிடியை உடையதாகவிருக்கும். இவை எலும்புகளில் நுழைந்திருக்கும் சல்லியங்களை வெளியேற்ற உதவும். இவற்றில் சிங்கம், புலி, பாம்பு முதலை போன்ற முக அமைப்புக் கொண்ட இயந்திரங்கள் வெளிப்படையாகத் தெரியும் முனைகளுடைய சல்லியங்களை வெளியேற்ற பயன்படுத்தப்படுகின்றன. வெளிப்படையாகத் தெரியாத குணங்களையுடைய சல்லியங்களை வெளிப்படுத்த காயங்களுக்கு ஏற்றவாறு இயந்திரங்களைப் பயன்படுத்த வேண்டும். இந்த இயந்திரங்கள் கொக்கு, கரடி,காகம் போன்ற முக அமைப்புடையன.

2. **சம்தம்ச இயந்திரம்:-** இது கழுத்துப்பகுதியில் உள்ள முனையால் இணைக்கப்பட்டது, இணைக்கப்படாதது என இருவகைப்படும். இது 140செமீ நீளமுடையது. தோல்,மாமிசம், இரத்தக்குழாய்கள், நரம்புகள் இவற்றில் புதைந்திருக்கின்ற இவற்றில் புதைந்து இருக்கின்ற சல்லியங்களை வெளிக்கொண்டு வர இவை பயன்படுபவை. இதைத்தவிர வேறு வகையான இயந்திரமும் உண்டு. இது 70செமீ நீளம் உடையது. இரு பக்கங்களிலும் வளைந்த இரு பிடிகளை உடையது. கட்டைவிரல், ஆட்காட்டிவிரல் இவற்றின் சேர்க்கையைப் போன்ற உருவம் பெற்றது. இதனால் நுட்பமான சல்லியங்களையும் ( உடலிற்குள் புகுந்து துன்பத்தை தரும் முள், ஆணி, கல், மண் முதலிய பொருட்களை), இமைகளின் ரோமங்களையும், மாமிசப்பையில் புதைந்திருப்பதையும் வெளிப்படுத்த பயன்படுத்தப்படுபவை.

3. **முசுண்டி இயந்திரம்:-** இவ்வியந்திரத்தின் முகத்தில் பிடிக்குமிடத்தில் சிறிய பற்கள் அமைக்கப்பட்டிருக்கும். வளையாத நேரான இரண்டு பிடிகள் இதற்கு உண்டு. அடிப்புறத்துப்பிடியில் ஒரு வளையம் பொருத்தப்பட்டிருக்கும். அந்த வளையம் முன்னும் பின்னுமாகத் தள்ளக்கூடியது. முன்பக்கம் வளையத்தைத் தள்ளத்தள்ள அதன் வாய் குறுகி சிறிதாகிக் கொண்டேயிருக்கும். பாதி ஒடிந்த மூலநோயின் முளையை எடுக்கவும், ஆழமான காயங்களில் உள்ள கெட்ட மாமிசங்களை வெளிப்படுத்தவும் இது உதவுகிறது.

4. **தாள இயந்திரங்கள்:-** இது இரு வகைப்படும். 6செமீ நீளமானது. மீன்தாடையில் உள்ள செதில் போன்ற இரு தாள்களை உடையதுமானது ஒரு வகை. மற்றொரு வகை ஒரே தாளையுடையது. இவ்விரு இயந்திரங்களும் காதுக்குள்ளிருக்கும் சல்லியங்களை வெளிப்படுத்த பயன்படுத்துபவை.

5. **நாடி இயந்திரங்கள்:-** இவை பல வகைப்படும். அவற்றின் உள்ளே துவாரங்கள் இருக்கும். அவற்றில் சில பல முகங்கள்

உள்ளவை. சில ஒரே முகம் உடையவை. இவை பல வகைகளில் பயன்படுத்தப்படுகிறது. இவை உடலிலுள்ள துவாரங்களில் புதைந்திருக்கும் சல்லியங்களைப் பார்ப்பதற்கும், எடுப்பதற்கும், சிகிச்சையை எளிய முறையில் செய்வதற்கும், உறிஞ்சுவதற்கும் பயன்படுத்தப்படுகின்றன. இவற்றின் நீளமும், பருமனும், உட்பக்கத்தின் அகலமும் இயந்திரத்துவாரங்களின் அமைப்புக்கு ஏற்றபடி அமைக்க வேண்டும்.

இது 25 செமீ அங்குல நீளமும் 12.5 செமீ சுற்றளவும் மூன்று முகத்துவாரங்களும் கொண்டது. இரண்டு பிடிகளுடன் கூடிய கொக்கி போன்ற வாரங்கத்தையுடைய குழல் போன்றதுமான நாடிஇயந்திரம், தொண்டைக்குள் உள்ள சல்லியத்தை பார்ப்பதற்காகப் பயன்படுத்தப்படுகிறது. இந்த நாடிஇயந்திரம் தொண்டையில் உள்ள துவாரத்தின் அளவுக்குச் சமமாக அமைக்கப்படவேண்டும். இவ்வாறு நான்கு பிடிகளையும் ஐந்து முகத்துவாரங்களையும் தொண்டையில் உள்ள சல்லியத்தை பார்ப்பதற்குப் பயன்படுகிறது. தொண்டைக்குள் உள்ள சல்லியத்தை வெளிப்படுத்த பயன்படும் நாடி இயந்திரம் 25செமீ நீளமும், மூன்று முகத்துவாரங்கள் கொண்டதும், தாமரைத் தண்டில் உள்ள முளை போன்ற உருவமுடையதும் ஆக இருக்கும்.

6. **அர்சோ இயந்திரங்கள்:-** இவை மூன்று வகை. இரும்பு, செம்பு, தந்தம், கொம்பு அல்லது மரத்தினால் செய்யப்பட்டவை. இவை பசுவின் காம்பைப் போன்றது. 10செமீ நீளம், கையளவு சுற்றளவுள்ளது ஒரு வகை. 12.5செமீ சுற்றளவு இயந்திரம் ஆண்களுக்கு பாவிக்கக்கூடியது. 15செமீ சுற்றளவு இயந்திரம் பெண்களுக்குரியது. இன்னொரு வகை இயந்திரம் இரு துவாரங்களைக் கொண்டது. ஒரு துவாரம் பார்ப்பதற்கும், மற்றொன்று சிகிச்சை செய்வதற்கும் பயன்படுகிறது. இவ்வாறு மூக்கில் தோன்றும் நோயை நீக்குவதற்கு மூக்கில் நுழையக்கூடிய சிறிய குழல் போன்ற 5செமீ சுற்றளவு கொண்டதும் ஒரு துவாரம் உள்ள ஆள்காட்டி விரலின் நீளம் கொண்டதுமான ஒரு இயந்திரம் தயார் செய்ய வேண்டும்.

7. **அங்குலித்தாரணம் (விரலைக்காக்கக்கூடிய இயந்திரம்):-** இந்த இயந்திரத்தில் கட்டைவிரல் நுழையக்கூடியதும்,சிறிது பருமனாகவும்,குழல் வடிவுள்ளதாகவும், வரம்புள்ளதாகவும், மேலும் கீழும் இரு துவாரங்கள் உடையதாகவும்,10செமீ நீளமுள்ளது. இதை உறுதியான நூலினால் மணிக்கட்டில் கட்டிக் கொண்டு நோயாளியின் மூடிய வாயைத திறக்க வேண்டும்.

(நோயாளியின் மூடிய வாயைத் திறக்கப் பயன்படுகிறது. அப்படித்திறக்கும் போது நோயாளியின் பற்களினால் விரல்கள் கடிபடாமல் இருப்பதற்கு உபயோகப்படுத்தப்படுகிறது)

8. **யோனிவ்ரணதாடசன இயந்திரம்:-** பெண் குறியில் புதைந்திருக்கும் சல்லியங்களை பார்க்க பயன்படும் கருவி. 40செமீ நீளமுடையது. இதன் நடுவில் துவாரம் இருக்க வேண்டும். குமிழ் போன்ற ஆணிகளால் இணைக்கப்பட்ட நான்கு சலாகைகள் சுழலுவதற்கு ஏற்றபடி இணைக்கப்பட்டிருக்க வேண்டும் ஒவ்வொரு சலாகைகளின் முனைகள் தாமரை மொட்டுப்போல் வழவழப்பாக இருக்க வேண்டும். அடியில் உள்ள சலாகையின் தாள்களைப் பிடித்து அழுத்தினால் மேல்பகுதியில் உள்ள தாள்கள் விரிவு அடையக்கூடியதாக இருக்க வேண்டும். பெண் குறியில் உண்டாகும் குழிப்புண்ணைக் கழுவுவதற்கும், அதில் எண்ணெய் போன்றவற்றை ஊற்றிப் பசையுண்டாக்கவும் பயன்படும்.

9. **நீர்ப்பீலிகை எனும் நோயில் நீரை வடிப்பதற்கு உதவக்கூடிய இயந்திரம்:-**

இதில் இரு பக்கமும் துவாரங்கள் உடையதாயிருக்க வேண்டும். சிநேகவஸ்தி (எண்ணெய்ப் பசையுண்டாக்குவது), உத்தரவஸ்தி (பெண்குறியில் செலுத்துவது), பிரதமதம் (மூக்கிலிடும் ஒரு வகை மருந்த), தூமபானம் ( புகைபிடிப்பது),

சிறுநீா் அடைப்பு, நிருத்தமணி (ஆண்குறியில் மணி முனையை மூடி விடும் நோய்) இந்நோய்களில் அவற்றிற்குத் தக்கவாறு இயந்திரத்தை அமைத்துக் கொள்ள வேண்டும்.

10. **சிருங்கஇயந்திரம்:- ( கொம்பினாலான பீச்சுக்குழல்):-** இவ்வியந்திரம் பல அளவுகளில் காணப்படுகிறது. மேலே 9செமீ அளவான முகம் உடையதாகவும், முனையில் வெண்கடுகு நுழையும்படியான துவாரமுடையதாக இருக்கும். மெல்லிய தோலினால் கட்டப்பட்டிருக்கும். இதன் முனை முலைக்காம்பு போல் அமைந்திருக்க வேண்டும். இந்த இயந்திரம் வாதம், நஞ்சு,இரத்தம்,நீா் இவற்றால் கெட்டுப்போன தாய்ப்பாலை உறிஞ்சும் வேளையில் பயன்படுகிறது.

11. **அலாப்பூயந்திரம் ( சுரக்குடுவை போன்றது):-** கபத்தினால் கெட்டுப்போன இரத்தத்தை உறிஞ்ச இவ்வியந்திரம் பயன்படுகிறது. இது 15செமீ நீளமும், 40செமீ அகலமுடையதாகவிருக்கும். இதன் முகம் 10செமீ சுற்றளவுடையதாக இருக்கும். இதன் உட்புறத்தில் தர்ப்பை, காய்ந்த விறகு,துணிஇவற்றைச்சுருட்டி உள்ளே நுழைத்து தீயிட்டு ஒளி எழுப்பி அதன் மூலமாக அதிகப்படியான கெட்ட இரத்தத்தை யும் கபத்தையும் வெளிப்படுத்தலாம்.

12. **கடிஇயந்திரம்:-** இது அலாப்பூயந்திரத்தைப் போன்றது. இது குன்மத்தை மேலுக்கு இழுத்து கரைக்க பயன்படுகிறது.

13. **சலாகா இயந்திரங்கள்:-**

இது பல வகை உருவங்களைக் கொண்டது. பல செயல்களில் பயன்படக்கூடியது. செயலுக்கு ஏற்றவாறு நீளமும், அகலமும் அமைந்திருக்க வேண்டும். நாற் புறமும் தேடும் செயலில் பயன்படுத்தக் கூடிய இந்த இரண்டு இயந்திரங்களும் மண்ணுணிப் பாம்பின் முகம் போன்று அமைந்திருக்க வேண்டும். இதனை ஏஷணி என்று அழைப்பா். காது மூக்கு போன்ற துவாரங்களில் உள்ள சல்லியங்களை வெளிப்படுத்த உதவும்.

## 14. சங்கு இயந்திரம்:

(கொக்கி போன்ற முனையுள்ள கூர்மையற்ற இயந்திரம்) ஆறு வகைப்படும். இதில் இரண்டு வகை புண்களைச் சுரண்டும் செயலில் பயன்படுத்தக்கூடியன. பாம்பின் படம் போன்ற உருவமைப்புடைய இரண்டு இயந்திரங்கள் உண்டு. அம்பு போன்ற முகமுடைய இயந்திரங்கள் இரண்டுள்ளன. இவை சல்லியங்களை அசைக்கப் பயன்படுத்தப்படுகின்றன.

உடலில் புகுந்துள்ள முள், ஆனி, கல், மண், போன்ற வெளிப் பொருட்களை வெளியே இழுப்பதற்கும் பயன்படுபவை. கருக்குழியில் இறந்து போன குழந்தையை வெளியே எடுக்க உபயோகிக்கப்படும் இயந்திரங்கள் சங்கம் போன்ற அமைப்பும் 40செமீ. நீளமுடையது. சிறுநீர்ப் பையில் சேர்ந்திருக்கின்ற மிகச் சிறிய கற்களை வெளி எடுக்கப் பயன்படும் இயந்திரங்கள் பாம்புப் படத்தைப் 'போல் முனையில் கொஞ்சம் வளைந்து இருக்கும்.

கொட்டுப் போன பற்களைப் பிடுங்கப் பயன்படுத்தப்படும் இயந்திரம் அம்பு போன்ற முகம் உடையது. 10செமீ. நீளம் உடையது. பருமனாகவும் உருளையாகவும் உள்ள முகம் கொண்டது.

நுனிப் பகுதியில் பஞ்சினால் சுற்றப்பட்ட ஆறு குச்சிகள் (சலாகைகள்) தயார் செய்து கொள்ள வேண்டும். இவை பலவிதமான புண்களின் ஊண் தண்ணீரைத் துடைப்பதற்கும், காரசிகிச்சை செய்யவும் பயன்படும். இவற்றில் 5செமீ, 17செமீ நீளமுடையவை. மூக்கின் தொலைவிலும், அருகிலுமுள்ள புண்களைச் சுத்தம் செய்யப்படக் கூடியவை.

ஆசனத்துவாரத்தில் உள்ள புண்களைத் துடைப்பதற்கும் 20செமீ, 25செமீ நீளமுள்ள குச்சிகள் பயன்படுகின்றன. காதுகளில் உள்ள புண்களைச் சுத்தப்படுத்த வேள்வியில் நெய் ஊற்றுவதற்குப் பயன்படும் கருவி போன்ற முகம் உடையயதும், அரசஇலையின் நுனி போன்ற அமைப்பு

உடையதுமான இரண்டு குச்சிகள் பயன்படுகின்றன. அதே போல் காரசிகிச்சை( கார்ப்பும், உப்பும் மிகுதியாக உள்ளதும் உடலைக் கொல்லும் சக்தியுடையதுமான திரவியம் ஷாரம். அந்தத் திரவியத்தினால் செய்யப்படும் சிகிச்சை.

**14. பலவகையான சலாகைகள்:-**

நடுப்பகுதி பெருத்தோ, மெலிந்தோ, நீண்டோ, சிறியதாகவோ பல குச்சிகள்(சலாகைகள்) உண்டு. குடல் இறக்கம் எனும் நோயில் பயன்படும் குச்சி நடுப்பகுதியிலிருந்து முனைவரை திரண்டும் உருண்டும் இருக்க வேண்டும். முனைப்பகுதி பிறைச்சந்திரன் அமைப்பு பெற்று இருத்தல் வேண்டும்.

மூக்கில் உண்டாகும் முளை நோயிலும் புரைகுழல் நோயிலும் சுடுவதற்காக இலந்தை விதைப் பருப்பு போன்ற முக அமைப்பு உள்ளதாக குச்சிகள் இருக்க வேண்டும்.

காரமருந்துகளையும், நஞ்சு கலந்த மருந்துகளையும் இடுவதற்குப் பயன்படும் தர்வி (வேள்வியில் நெருப்பில் நெய் ஊற்றுவதற்குப் பயன்படும் சிறு அகப்பை போன்ற கருவி) போன்ற அமைப்புள்ள மூன்று குச்சிகள் வேண்டும். அவை சுண்டுவிரல், மோதிரவிரல், நடுவிரல் நகங்களுக்கு ஈடான பள்ளங்களை நுனியில் கொண்டிருக்க வேண்டும். பெண்குறியில் இடும் வஸ்திக்குள் மை தீட்டுவதற்கும் பயன்படும் குச்சிகள் ஆங்காங்கே சொல்லப்பட்டிருக்கின்றன.

**15. துணை இயந்திரங்கள்:-**

காந்தக்கல், கயிறு, தோல், நரம்பு, துணி, கல் இரும்புலக்கை, உள்ளங்கை, உள்ளங்கால் விரல், நாக்கு, பல், நகம், கேசம், குதிரை, காலம், பாகம், மகிழ்ச்சி, அச்சம் இவை இயந்திரங்களுடன் பயன்படுவதால் துணைஇயந்திரங்கள் எனப்படும். இவற்றை உடல் முழுவதிலுமோ அல்லது உடலில் ஏதாவது ஓர் உறுப்பிலோ, மூட்டுக்கள், வயிற்றிலோ, இரத்தக்குழாய்கள் இவற்றிலோ அவற்றிற்கு தக்கவாறு பயன்படுத்த வேண்டும்.

**இயந்திரங்களின் பொதுச் செயல்கள்:-**

அடித்தல், நிரப்புதல், கட்டுதல், செலுத்துதல், திருப்புதல், அசைத்தல், விரித்தல், பிடித்து விடுதல், உடலில் உள்ள வழிகளைச் சுத்தப்படுத்தல், இழுத்தல், எடுத்தல்,தெளிவுபடுத்தல், உயர்த்துதல், தாழ்த்துதல், ஒடித்தல், கடைதல், உறிஞ்சல், நுழைதல், பிளத்தல், நேராகச் செய்தல், கழுவுதல், ஊதல், மையிடுதல், துடைத்தல் என்ற இருபத்துநான்கு செயல்களும் பெரும்பாலும் துணையந்திரங்களைச் சேர்ந்தது.

சுங்க முக இயந்திரம் ( கழுகுமுகஇயந்திரம்) நாற்புறமும் சுழலும் தன்மை பெற்றது. ஆழமான பகுதிகளில் நன்கு எளிதில் புகக்கூடியது. பற்றிக் கொள்ள வேண்டியவற்றைக் கெட்டியாக பற்றி இழுக்கும் தன்மை பெற்றது. எல்லா உறுப்புக்களிலும் பயன்படுத்த ஏற்றதாயுள்ளது. ஆகையினால் இந்த கழுகுமுக யந்திரம் மற்ற இயந்திரங்களை விடச் சிறந்ததாக கருதப்படுகிறது.

# சஸ்திரங்கள்

இவை இருபத்தாறு வகைப்படும்.

01. தந்தலேகனம் ( பற்களைச் சுரண்டும் கருவி)
02. மண்டலாக்கரம் ( சிறிய அரிவாள் போன்ற கருவி)
03. விருத்திபத்ரம் ( அகன்ற கூர்மையுள்ள கருவி)
04. உத்பலாத்ரம் ( நெய்தல் மலர் போன்ற தளமுள்ள கத்தி)
05. அத்யர்த்த தாரை ( மேற்குறிப்பிட்டமலரைவிட 11.'.2 மடங்கு தளம் குறைவு)
06. முத்ரிகா (ஆட்காட்டி விரலின் ஒரு கணுவில் போடக்கூடிய கருவி)
07. கர்தரி (கத்தரிக்கோல்)
08. ஸர்ப வக்த்ரம் ( பாம்பு முகத்தை போன்ற அமைப்புள்ள கருவி)
09. கர பத்ரம் ( கைவாள்)
10. குசபத்ரம் ( தர்ப்பை முனை போன்ற கூர்மையான கத்தி)
11. ஆடாமுகம் (வாத்து அலகைப் போன்ற கத்தி)
12. அந்தர்முகம் ( கத்தரிக்கோல் போன்ற உட்புறம் வளைந்து சுருக்கு உடைய கத்தி)
13. சரமரி முகம் ( நாரை பறவை போன்ற கத்தி)
14. திரிகூர்ச்சம் ( மூன்று முனைகளுடைய கருவி)
15. குடாரிகா (கோடாரி போன்ற கருவி)
16. விரிஹிமுகம் ( நெல் முனை போன்ற கருவி)
17. சலாகை (இரு முகம் உள்ள கருவி)
18. வேதபைத்திரம் (நொச்சி இலை போன்ற கூர்மையுள்ள கருவி)
19. ஆரசு (ரம்பம் எனும் கருவி)
20. கர்ண வியதன ஸுசி (காது குத்தப் பயன்படும் ஊசி போன்ற கருவி)
21. ஸுசி (ஊசி)
22. ஸுசீகூர்சம் ( பல ஊசிகள் சேர்ந்து தர்ப்பைகளினால் கட்டப்பட்ட முடிச்சு போன்ற கருவி)
23. கஜம் (மத்துப் போலிருக்கும் கருவி)

24. ஏஷ°ணி (வழவழப்பான ஊசி போன்ற கருவி)
25. படிகம் (தூண்டில் முள் போன்ற கருவி)
26. நகசஸ்திரம் ( நகம் அகற்றும் கருவி)

இவற்றில் தந்தலோகனம் ( பற்களின் காரைகளைச் சுரண்டுவது), மண்டலாக்கரம் ஆகிய கருவிகள் இரண்டும் சுரண்டும் செய்கையில் பயன்படுத்தப்படுகின்றன.

விருத்திபத்திரம், உத்பல பத்திரம், அத்யர்த்த தாரை ஆகியவை கிழிப்பதற்கு உபயோகப்படுத்தப்படுகின்றன. விருத்தி பத்திரம், உத்பல பத்திரம், அத்யர்த்ததாரை, முத்ரிகா ஆகியவை பிளப்பதற்க்குப் பயன்படுத்தப்படுகின்றன.

மண்டலாக்ரம், விருத்தி பத்திரம், உத்பல யந்திரம், அத்யர்த்த தாரை, முத்ரிகா, கத்திரி, சர்ப்ப வக்தரம், கரபத்திரம் ஆகியவை அறுவைக்கு பயன்படுத்தப்படுகின்றன.

கூச பத்ரம், ஆடாமுகம், அந்தர்முகம், சராமுகம், திரிகூர்ச்சம் ஆகியவை தோலைக் குத்தி இரத்தம் வெளிப்படுத்தும் செயலில் பயன்படுத்தப்படுகிறது.

சூடாரிகா, விரிஹிமுகம், சலாகா, வேதஸபத்திரம், ஆரா, கர்ணவ்யதனம் ஆகியவை துளைக்கும் செயலில் பயன்படுபவை. இதில் ஆரா, வ்ரிஹிமுகம் ஆகியவை அறுவையிலும், வெட்டுவதிலும் பயன்படுபவை. ஊசிகள் தைப்பதற்க்குப் பயன்படுத்தப்படுகின்றன. ஸு°சி, கூர்ச்சம் வெட்டுவதற்க்குப் பயன்படுகிறது. ஏஷணி எனும் சஸ்திரம் துழாவுவதற்கும், பிளப்பதற்கும் பயன்படுத்தப்படுகிறது. படிசம் பிடிப்பதற்கும், நாகசஸ்திரம் எடுப்பதற்கும், பிளப்பதற்கும்,சுரண்டுவதற்கும், கீறி இரத்தம் உண்டாக்குவதற்கும் பயன்படுகிறது.

பற்களில் படிந்திருக்கும் காரையைச் சுரண்டுவதற்குப் பயன்படும் தந்தலேகனம் எனும் சஸ்திரம் நான்கு சதுரமான நாளங்கள் உடையதாகவும் மற்றொரு பக்கத்தில் கட்டு உள்ளதாகவும் ஒரே பக்கம் சுருக்கு உள்ளதாகவும் அமைந்திருக்கும்.

மண்டலாக்கிரம் (உருண்டையான நுனியுடைய சிறிய வாள்) ஆகிய சஸ்திரம் ஆள்காட்டி விரல் நகத்தின் உட்புறம் போன்று வளைந்து கூர்மையான கருக்குடன் கூடியதாக அமைந்திருக்கும். இந்த சஸ்திரம் கண் இமைகளின் உட்புறததில் வளர்ச்சியடைந்த தேவையற்ற மாமிசத்தையும், ஈறுகளில் உள்ள அதிக மாமிசத்தையும், ஆழமான புண்களில் உள்ள கெட்ட மாமிசத்தையும் போக்குகிறது. உள்நாக்கு நோயில் கீறுவதற்கும், அறுப்பதற்கும் பயன்படுகிறது.

அகன்ற தளமுள்ள விருத்தி பத்ரம் எனும் சஸ்திரம் கூர்மையான கத்தி போன்றது. இதில் ஒன்று வளைவில்லாமல் நீண்டமுனையுடன் கூடியது. வீக்கம் மேலாக உயர்ந்திருக்கும். மற்றையது பின்புறம் வளைந்த முனையுடையது. இதை வீக்கத்துடன் கூடிய ஆழமான புண்களில் பயன்படுத்த வேண்டும். இவ்விரண்டும் அறுத்தல், வெட்டுதல், கிழித்தல் இவற்றைச் செய்வதற்கு பயன்படுகின்றன.

மோதிரம் போன்ற ஒரு வளையம் தயார் செய்து கொள்ளவும். அதிலிருந்து இந்த சஸ்திரத்தின் முகம் ஆரம்பிக்கப்பட்டு நீண்டிருக்க வேண்டும். இதன் குறுகலான பகுதி அரைஅங்குல நீளமுள்ளதாக இருக்க வேண்டும். இதன் அமைப்பு விருத்தி பத்திரம், மண்டலாக்கிரம், அத்யர்ததாரை இவற்றில் ஒன்றையொத்து இருக்க வேண்டும். இதை அங்குலி சஸ்திரம் என அழைப்பர். இதனை ஆட்காட்டி விரலின் முதல் கணுவில் மாட்டி அதன் இரு புறங்களிலும் உள்ள வளையத்தில் கயிற்றை நுழைத்துக் கட்டியபின் தொண்டை அறுவை சிகிச்சையில் இதை பயன்படுத்தலாம்.

மூன்றில் ஒரு பங்கு கைப்பிடியுள்ள கத்தரிக்கோல், காயம், தசைநார், ரோமம், நூல் இவற்றைத் துண்டிக்கும் வேலையில் பயன்படுகிறது.

சர்ப்ப வக்தரம் எனும் கத்தரிக்கோல் பாம்பின் முகம் போன்றது. 1செமீ கூர்மையுடையது. வளைந்த இந்த கத்தரிக்கோல் மூக்கு, காது, இவற்றில் உண்டாகும் முளை, புரை, குழல் இவற்றை வெட்டப் பயன்படும்.

## புகை

1. பிடித்தல் அல்லது குடித்தல்
2. புகையை புண் முதலியவற்றில் தாக்கும்படி செய்தல்
3. நாற்றத்தை அகற்றும் வண்ணம் மணப்புகை போடல்

புகையை மூக்கின்வழியாகவும், வாயின் வழியாகவும் பிடிக்கலாம். இதனால் பீநிசநோய்கள், சிரசுநோய்கள் நீங்கும். இங்கு புகையை மூக்கினால் பிடித்து வாயினால் விடுவதுண்டு, வாயினால் பிடித்து மூக்கினால் விடக்கூடாது. மூலம், பகந்தரம்,யோனிப்புற்று ஆகிய நோய்களில் இரசம் சேர்ந்த புகைகளைப் பயன்படுத்த வேண்டும்.

## வேது பிடித்தல்

உடலினின்றும் வியர்வையைப் பெருக்கும்படி செய்வதற்கு ஏற்ற முறைகளில் ஒன்றாகும். இது சோபை,யானைக்கால், தலைநீர்க்கோவை ஆகிய பிணிகளில் வேதுவை உபயோகித்து நீரை அகற்றுவது வழக்கம். இதில் நீரைச் சில மூலிகைகளுடன் சேர்த்துக் கொதிக்க வைத்து அதிலிருந்து எழும் ஆவியைப்பிடித்தல். நீரினுள் சிவக்கக் காய்ச்சிய மண், செங்கல்,உலோகம் ஆகியவற்றைப் போட்டு அதினின்று எழும் ஆவியைப்பிடித்தல்.

## ஒற்றடம்

கம்பளித்துணி அல்லது பருத்தித் துணியைக் கொதிக்கும் வெந்நீரில் நனைத்துப் பிழிந்து வேதனையுள்ள இடங்களில் ஒற்றடமிட நீங்கும். வீக்கம், கட்டிகளுக்கு இதனைச் செய்யலாம். தைலங்களை நோயுள்ள இடங்களில் பூசி நொச்சி, எருக்கு,தழுதாழை, ஆமணக்கு போன்ற இலைகளை ஆமணக்கு எண்ணெய் விட்டு வதக்கி ஒற்றடமிட வாதத்தால் உண்டான வீக்கம்,வலி நீங்கும்.

மஞ்சல், உப்பு இரண்டையும் பொட்டணமாகக் கட்டி கொதிக்கும் எண்ணெயில் தோய்த்துச் சற்று ஆறியபின் அடிபட்ட வீக்கங்கட்கு நோயுள்ள இடங்களில் ஒற்றடமிடலாம்.

## பொட்டணம்

சில மருந்துகளைத் துணித்துண்டில் பொட்டணமாக முடிந்து காது, மூக்கு,எருவாய்,பெண்களின் கருவாய் ஆகிய இடங்களில் வைத்தல்.

காதுவலி, காதிரைச்சல் என்பவற்றுக்கு உள்ளி, காயம் பொட்டணம் கட்டி வைத்தல். யோனியின் வாசல் தளர்ச்சிக்கு நாவல்,அத்தி,கடுக்காய்தோல் இவற்றின் பொடிகளை ஒரு சிறுதுணியல் முடிந்து கருவாயின் வழியாக செலுத்தல்.

# காரசாரம்

இது கட்டி, பிளவை, கெட்ட ஊண் வளர்ச்சியுடைய புண்கள், சிலையோடும் புண்கள் ஆகிய இவற்றில் கெட்டழிந்த தாதுக்களை வெளிப்படுத்துவதில் சிறப்புடையது. எவ்வாறெனில் குற்றப்படாத தாதுக்களைச் சேதஞ் செய்யாது பதனழிந்தவற்றைக் கல்லி, கரைத்துவிடுந்தன்மை இதற்கு உண்டு. சத்திரக் கருவியாலறுத்து அல்லது கீறிக் கெட்ட தசை முதலியவற்றை வெளிப்படுத்துங்கால், குற்றமடையாத நல்ல தாதுக்களும் வெட்டப்பட்டு வீணாக வெளிப்படுத்தப்படும். இதனால் அவ்விடத்திலுள்ள குற்றமானது ஒரு வேளை பங்கமடையாத மற்ற தாதுக்களையும் கெடுத்துவிடும். ஈதன்றிச் சிலைப்புண்கள், இரத்தநாளம், நரம்புகள் நிறைந்த இடங்களில் பல கிளைகளுடன் வேரூன்றியிருக்கும் போது கத்தி முதலியவற்றால் அறுவை செய்வதனால் அவ்விடத்தில் பொருந்திய நாடிநரம்புகள் அறுபட நேரிடும். ஆதலின் கார மருந்துகளைப் பயன்படுத்தத் தீங்குகள் விளையாமல் பதனழிந்த தாதுக்கள் மட்டும் வெளிப்படும்.

**காரப்பரிகாரத்தில் அடங்குபவை:-** காரம், சீலை, களிம்பு, பொடி, நீர், களி, பசை.

**காரச்சீலை செய்யும் முறை:-**

1. நீலம், அரிதாரம், பச்சைவெட்டு சமவெடை எடுத்து பொடித்து எண்ணெய் விட்டரைத்துப் பிறகு குளிர் நீர் விட்டு 7 முறை அரைத்துச் சுத்தி செய்து குப்பியில் அடைத்துக் கொண்டு இரத்தக்கிரந்தி, நருள்குன்றி, கிரந்தி, அரிகிரந்தி, பவுத்திரம், ஆறால்புண்கள் இவற்றின்மேல் போட்டுவர ஆறிவிடும்.

2. துரிசு, அரிதாரம், இரசம் (பாதரசம்), கந்தகம், இலிங்கம், வெங்காரம் சம எடை எடுத்து வெள்ளெருக்கம்பூச்சாறு, ஊமத்தஞ்சாறு கலந்து அரைத்து துணியில் தடவி வைத்துக்கொண்டு ஆறாதஇரணம், சூலை,வெடிப்புக்கிரந்தி,குஷ்டம், இரத்தக்கிரந்தி, பவுத்திரம் முதலியவற்றுக்கு இச்சீலையைப் போட்டு வர மாறும்.

**காரத்தின் குணங்கள்:-** பல மூலிகைப் பொருட்களின் சேர்க்கையால் ஆக்கப்பட்டுள்ளதால் எல்லாச்சுவைகளுக்கும் இருப்பிடமாகக் கொண்டாலும் கார்ப்புச்சுவையும், உப்புச்சுவையையும் அதிகமாகக் கொண்டுள்ளது. உஷ்ணவீரிய குணமுள்ளது. எரிச்சல், பழுக்கச்செய்தல், பிளத்தல், உருகச்செய்தல், சுத்தப்படுத்தல், ஆற்றுதல் ஆகிய குணங்களையுடையதும், புழுக்கள், அசீரணநிலை,கொழுப்பு, நஞ்சு இவற்றை போக்கவல்லது. எல்லா வகையான ஆயுதங்கள், துணை ஆயுதங்களிலும் உயர்வானது. வெட்டுதல், பிளத்தல், உடைத்தல், கரைத்தல் செயல்களை ஆற்றும் வல்லமையுடையது. மிகுந்த பிரயத்தனமாக ஆயுதங்களை பயன்படுத்த வேண்டிய உறுப்புக்களிலும், ஆயுதசிகிச்சை செய்து பயன்படாத இடத்திலும், மூக்கில் உண்டாகும் முளைநோய், புரைகுழல், ஆயுதசிகிச்சை செய்து ஆறாதபுரையோடிய புண்கள், மேன்மேலும் ஆறாமல் வளர்ந்து கொண்டிருக்கின்ற புண்கள் ஆகியவற்றில் இந்த காரசிகிச்சை பயன்படுகிறது.

## காரத்தின் குணம் இருவகையானது.

1. உள்ளுறுப்புகளைச் சுத்தப்படுத்துவது
2. வெளி உறுப்புக்களைச் சுத்தப்படுத்துவது.

குன்மம், இடுநஞ்சு, நீர்ப்பீலிகை அக்னி குறைவு, மலம்தேங்கியிருத்தல், வயிற்றுவலி, வயிறு உப்பிசம், அச்மரி, சர்க்கரா எனும் சிறுநீர்ப்பையில் தோன்றும் நோய் போன்றவற்றிற்கு உள்ளுறுப்புகளைச் சுத்தப்படுத்தும் காரங்கள் பாவிக்கவேண்டும்.

மூலநோய், புரைகுழல், பவுத்திரம், நரம்புசுருட்டல், புரையோடியபுண், அழுகிய புண், தோலின் மேல் உண்டாகும் முளை, கண்களின் இரப்பையில் உட்புறமாயுள்ள மாமிசப்பகுதியில் தோன்றும் நோய், முகத்தில் உண்டாகும் பிணி, குஷ்டம், பெருவியாதி, முகத்தில் உண்டாகும் எள்ளுப்போன்ற கருநிறமுள்ள மரு ஆகியவை வெளி உறுப்பில் செய்யப்படும் காரசிகிச்சைக்கு உட்பட்டது.

## காரசிகிச்சைக்கு தகுதியற்றவர்கள்:-

பயந்த குணமுள்ளவன், வலிவற்றவன்,இளைத்தவன், வாதபித்தத்தால் துன்பப்படுபவன், காய்ச்சல் உள்ளவன், பேதி ஆகிறவன், பாண்டு நோயுள்ளவன், தலைவலியுள்ளவன், இதயநோயுள்ளவன், நீரிழிவு உள்ளவன், கண்களில் அழற்ச்சியுள்ளவன், கண்மறைவு பெற்றவன், சுவையறியாதவன், பேதிக்கும் வாந்திக்கும் எடுத்துக்கொண்ட நோயாளி, மாதவிடாய் உடையவன், கருத்தரித்தவள், மேல்தூக்கிய கோசமுடைய பெண்குறியுள்ளவள், உடல் முழுவதும் வலியுள்ளவர்கள், விஷம், கள் இவற்றைக் குடித்தவர்கள் ஆகியவர்களுக்கு உள்உறுப்பு, வெளியுறுப்பு ஆகியவற்றை சுத்தப்படுத்தும் இருவகை காரங்களையும் செய்யக்கூடாது. காரசிகிச்சையில் மர்மஸ்தானங்கள், நரம்புகள், என்புகளை ஒன்று கட்டும் தசைநார், மூட்டுக்கள், இளம் எலும்புகள், தைக்கப்பட்ட அடையாளம் உள்ள பகுதி, இரத்தக்குழாய்கள், தொண்டை, தொப்புள், நகங்கள், விரை, ஆண்குறி, கண், காது போன்ற துவாரங்கள், குறைவான மாமிசம் உள்ள பகுதி, கண்ணின் இரப்பையில் உட்புறமாயுள்ள மாமிசப்பகுதியில் தோன்றும் நோய் நீங்கலாக மற்ற கண் நோய் ஆகிய பகுதிகளில் இருவகையான காரப்பிரயோகங்களையும் செய்யக்கூடாது.

பொதுவாக காரங்களை தயார் செய்து 7 நாட்களின் பின் நோயின் நிலையையறிந்து பயன்படுத்த வேண்டும். காரத்தின் வீரியம் குறைந்து போனால் மறுபடியும் அதிக குணம் ஏற்படுவதற்கு காரநீரைச்சேர்க்க வேண்டும்.

## காரச்சீலையை தயார் செய்தல்:-

காட்டுப்பருத்தி மரத்திற்கு பூசை செய்து பின் கதிரவன் தோன்றும் வேளையில் அந்தணர்களைக் கொண்டு ஆசி பெற்று கிழக்கு அல்லது வடக்குப் பக்கம் விழும்படி வெட்ட வேண்டும். பின் கல்யாணமுருங்கை, மலைவேம்பு, வெட்பாலை, ஆடாதோடை, ஏழிலப்பாலை, புங்கு, வாழை, தான்றிக்காய், அலரி, கொடிவேலி, எருக்கு, நாயுருவி இவற்றை சித்திரை, வைகாசி மாதத்தில்

வெட்டி துண்டுகளாக்கி முழுவதும் உலராநிலையில் கற்பாறையில் காற்றோட்டமில்லாத இடத்தில் சுண்ணாம்புக்கற்களை போட்டு அதன் மீது எள்ளுத்தாளை இட்டு எரிக்க வேண்டும். எரிந்து அணைந்த பின் சுண்ணாம்பு கற்களின் சாம்பலைத் தனியாகவும், மற்ற மரங்களின் சாம்பலை தனியாகவும் சேகரிக்க வேண்டும். பின் இவற்றில் சுண்ணாம்புகல் சாம்பலுக்கு சமவளவாக அதிகளவு காட்டுப்பருத்தி கொண்ட மிகுதி மூலிகைச்சரக்குகளின் சாம்பல் சம அளவு எடுத்து நீர், பசுவின் சலம் இவற்றைக் கலந்து துணியால் வடிகட்டி திரவத்தைப் பெற்றுக் கொள்ளல். இத்திரவம் பிசுபிசுப்பும், செந்நிறமும் தோன்றும்வரை தெளிய வைக்க வேண்டும். பின் எண்ணெய் காய்ச்சுவது போன்று தாச்சியில் இட்டு மத்தால் கடைந்து கொண்டு காய்ச்ச வேண்டும். பின் வேறொரு தாச்சியில் சுண்ணாம்பு கற்களையும், சங்கநாபி எனும் திரவத்தையும், சிறுதுண்டு கோழியிறைச்சி போட்டு வறுத்தல். வறுத்த பொடியை முன் காய்ச்சிய குழம்பில் போட்டு கடையவேண்டும். குமிழிகள் ஏற்படும்வரையும், மத்தில் ஒட்டும் வரையும் கடைய வேண்டும். பின் இரும்பு பாத்திரத்தில் இட்டு நவதாணியத்தில் புதைத்து வைக்க வேண்டும்.

**காரத்தின் 10 குணங்கள்:-**

1. அதிக காரகுணமில்லை
2. அதிக மிருதுவில்லை
3. வெண்ணிறம்
4. மழமழப்பானது
5. விரைவில் உடலில் பரவும்
6. பிசுபிசுப்புடையது
7. சிகரம் போல் மேல் வரம்பு
8. காடியால் தணியும்
9. சிறிதளவு வலி கொடுப்பது
10. நீர்க்கசிவையுண்டாக்காது

**காரத்தின் 10 தோஷங்கள்:-**

1. அதிக உஷ்ணம்
2. அதிக கனம்
3. அதிக குளிர்ச்சி
4. அதிகபிசுபிசுப்பு
5. அதிகதீட்சணம்
6. பரவும் தன்மை
7. அதிக மிருது
8. வீரியக்குறைவு
9. அதிக மெல்லியது
10. சரியாக பக்குவமடையாமை

## காரசிகிச்சைக்கு தேவையானவை:

பஞ்சு, வர்த்தி, குச்சிகள், அகப்பை, சிறுகிண்ணம், நெய்,தேன்,காடி, உமியினால் செய்த காடி, மோர்தெளிவு, பால், தண்ணீர், குளிர்ச்சியான பூச்சுப்பொருட்கள், படுக்கை, இருக்கை ஆகியவை சிகிச்சை செய்வதற்கு முன் தயார் நிலையில் இருக்க வேண்டும்.

## காரசிகிச்சை செய்யும் முறை:-

இச்சிகிச்சைக்கு தகுதியான நோயாளியை அமர்த்தி அல்லது படுக்கச் செய்து நோயாளியை மற்றவர்களின் உதவியுடன் பிடித்துக் கொள்ளச் செய்து நோய் உள்ள இடத்தை பிளந்தோ அல்லது சுரண்டியோ, துடைத்தோ, பஞ்சு அல்லது துணியினால் சுருட்டிய குச்சியினால் காரத்தை இடவும். பின் 100மாத்திரை அப்படியே வைத்திருக்க வேண்டும்.

**கண்களின் இரப்பையின் உட்புறமாயுள்ள மாமிசப்பகுதியில் தோன்றும் நோயின் இமைகளை நன்றாகத் திறந்த பஞ்சு அல்லது தேன் மெழுகினால் கருவிழியை மூடி மெல்லியளவு காரத்தை பூச வேண்டும்.**

**மூக்கில் உண்டான முளைநோய், புரைகுழல் இவற்றில் நோயாளியை கிழக்கு முகமாக அமர்த்தி மூக்கை உயர்த்தி காரத்தை பூச வேண்டும். ஆசன வாயில் தோன்றும் முளை நோயில்** மருந்து பூசப்பட்டிருக்கும் கருவியின் துவாரத்தைக் கையினால் மூடி 100 மாத்திரை கால அளவு வைத்திருக்க வேண்டும்.

பின் பஞ்சு அல்லது மெல்லிய துணியினால் பூசப்பட்ட காரத்தை துடைத்து, நன்கு சிகிச்சை செய்யப்பட்டதா என்பதை ஆராய்ந்து அவ்விடத்தில் தேனையும், நெய்யையும் குழைத்து பூச வேண்டும். காடி, உமியினால் செய்யப்பட்ட காடி, மோர்த்தெளிவு, பால் இவற்றால் குளிர்ச்சியையுண்டு பண்ணவும். குளிர்ச்சி பொருந்திய இனிப்புச்சுவையுடைய பொருட்களை நெய்யில் குழப்பி மேற்பூச்சு இடவும். பசையினாலும்,குரு குணத்தினாலும் உடலுக்கு செழிப்பை உண்டாக்குவதும், ஈரப்பசையைத் தோற்றுவிப்பதுமான உணவுவகையைக் கொடுக்க வேண்டும்.

நோய் வேரூன்றிப் போய் காரச்சிகிச்சைக்கு கட்டுப்படாத நிலையில் அதிமதுரம், எள்ளு பொடி செய்து பூச வேண்டும். புண்ணை வேப்பங்குடிநீரினால் கழுவவேண்டும். அதிமதுரத்தையும், எள்ளையும் நெய்யில் குழப்பி புண்ணில் இட புண் விரைவாக ஆறும்.

பழுத்த நாவற்பழத்தின் கருநிறம் போன்று புண் குணமடைந்து எளிய சிகிச்சையினால் புண் தணிந்திருக்குமேயானால் காரசிகிச்சை சிறப்பாக நடந்ததன் அறிகுறியாகும். மேற்கூறிய குறிகுணங்களுக்கு எதிரிடையாகவும் குத்தல், வலி, அரிப்பு, பளு மீண்டும் காரச்சிகிச்சை செய்ய வேண்டும். நெருப்புச் சுட்டது போன்ற வேதனை,எரிச்சல்,செந்நிறம் கலந்த வீக்கம், போன்றன நிகழ்ந்தால் காரத்தினால் அதிகம் சுடப்பட்டதென அறிக. கண்ணில் அதிகம் சுடப்பட்டால் இமை விழுவதுடன், கண்பார்வையிழந்து விடும். மூக்கில் அதிகம் சுடப்பட்டால் மூக்குத்தண்டு, மூக்கின் இளம் எலும்பு பிளந்து விடும்.

புளிப்புச் சுவையுள்ள பொருட்களால் தயாரிக்கப்பட்ட காரம் இனிப்புத்தன்மையுடன் மிருதுத்தன்மையும் பெறுகிறது. ஆகையால் புளிப்புச் சுவையை காரத்தின் வேகத்தை குறைப்பதற்கு பயன்படுத்த வேண்டும். நெல்லிக்கனி, விளாம்பழம், புளிப்புமாதுளம்பழம் இவற்றின் சாற்றில் நெய் கலந்து காய்ச்சிக் குடிக்கவும்.

காரசாரம் என்பதில் மருந்துச் சரக்குகளின் தண்ணீரில் கரைத்து வடிகட்டி அதன் தெளிவைச் சுண்டகட காய்ச்சி பெரும்பாலும் ஷாரங்கள் தயாரிக்கப் பயன்படுகின்றன. இவைகள் கராச்சரக்குகள் (Alkaline Compound) ஆகும்.

முதலில் சரக்குகள் நன்கு காய வைக்கப்படுகின்றன. பின்னர் அவைகள் அதிகம் காற்று இல்லாத இடத்தில் கொளுத்தப்பட்டு நன்கு சாம்பலாக்கப்படுகின்றன. அந்தச் சாம்பலானது நான்கு பங்கு தண்ணீரில் கரைக்கப்பட்டு கலவை நன்கு தெளிவடைவதற்காக ஒரு நாள் முழுவதும் கலங்காமல் பாத்திரத்தில் வைக்கப்படுகிறது. நன்கு தெளிந்த பின்னர் கலவை கலங்காதவாறு அதன் தெளிவு மட்டும் நன்றாக இறுத்து எடுத்துக் கொள்ளப்படுகிறது. பிறகு அந்த தெளிவு கொதிக்க வைக்கப்படும்.

ஷாரத்தின் வெண்மை நிறம் பெரிதும் தெளிவின் தரத்தையே பெரிதும் பொருத்தது. ஆதலால் கலவையின் வண்டல் முற்றிலுமாகத் தவிர்க்கப்பட வேண்டும். நீர்மப்பகுதி முற்றிலுமாக வற்றி வெண்ணிறமான கட்டிகளும் பொடிகளுமாகத் தங்கிய ஷாரம் நன்கு ஆறிய பின்னர் பொடித்துச் சலித்து பத்திரப்படுத்தப்படுகிறது. ஷாரங்கள் கசியும் தன்மையுள்ளவையாகையால் காற்றுப்புகாத கலங்களில் இவைகளைப் பத்திரப்படுத்த வேண்டும். இவைகள் உப்புச்சுவையுடையவை.

ஷாரங்கள் சிறிது நீர்த்துப் போனால் அதில் சிறிதளவு தண்ணீர் சேர்த்து வடிக்கட்டிக் கொதிக்க வைத்துத் தண்ணீர் வற்றியவுடன் மேலே கூறிய முறைப்படியே பொடித்துச் சலித்து பத்திரப்படுத்தவும். உட்கொள்ளுவதற்கு திரவமாகவும் வெளியே பூசுவதற்கு சிறிது தடித்தும் இவற்றை தயாரிப்பது உண்டு. ஆனால் நடைமுறையில் பெரும்பாலும் மேலே கூறிய முறையே (பொடி வடிவம்) பின்பற்றப்படுகிறது.

மருந்துச் சரக்குகளை சிறு சிறு துண்டுகளாக்கி நெய், பசுவின் மூத்திரம் போன்ற திரவங்களுடன் கலநதோ அவை அல்லாமலோ மண் சட்டியிலிட்டு சட்யின் வாயை அகலால் மூடி நன்கு சீலை மண் செய்து காய்ந்த பின்னர் சரக்குகள் கருகும் வரை நன்கு எரிக்கவும். ஆறி பின்னர் அதைப் பொடித்துச் சலிக்கவும்.

கருகாத பாகங்களைப் பிரித்தெடுத்து மறுபடியும் முறைப்படி எரித்தும் தயாரிக்கலாம்.

சாம்பலைத் தண்ணீரில் கரைத்து க்ஷாரம் தயாரிக்கும் போதும் சாம்பல் கலவை ருசியற்றுப் போகும் வரை தண்ணீர் சேர்த்துக் கலக்கிக் கலக்கித் தெளிவை எடுத்து வற்ற வைக்கலாம்.

## *சில க்ஷாரங்களும் அவற்றின் உபயோகங்களும்*

அபமார்க க்ஷாரம் எனப்படும் நாயுருவிச் சாரத்தினை 125-500 மி. கி அளவிலே நீருடன் உட்கொள்ள குன்மம் (குல்ம), வயிற்றுவலி (உதர சூல), இரப்பு (ஸ்வாஸ) ஆகியன நீங்கும்.

கதலி க்ஷாரம் எனப்படும் வாலைச் சாரத்தினை 125-250 மி.கி அளவுடன் நீருடன் உட்கொள்ள குன்மம் (குல்ம), மஞ்சள் வீக்கம் (ப்லீஹோர்தர), நாட்பட்ட காய்ச்சல் (ஜீர்ண ஜ்வர), வீக்கம் (ஸோப) ஆகியன தீரும்.

பலாச க்ஷாரம் எனப்படும் புரச காரத்தினை அரை முதல் ஒரு கிராம் அளவிலே வெந்நீர் அல்லது பாலுடன் உட் கொள்ள பசியின்மை (அக்னி மாந்த்ய), குன்மம் (குல்ம), கல்லீரல் மண்ணீரல் வீக்கம் (ப்லீஹயக்ருத்வ்ருத்தி) எரிச்சலுடன் சிறுநீர் கழிதல் (மூத்ரக்ரிச்சர) கல்லடைப்பு அஸ்மரி ஆகிய நோய்கள் தீரும்.

மூலக க்ஷாரம் என்னும் முள்ளங்கிச் சாரத்தினை ஒரு கிராம் அளவில் நீருடன் உட் கொள்ள சிரமத்துடன் சிறுநீர் கழிதல் (மூத்ரக்ரிச்சர), கல்லடைப்பு (அஷ்மரீ) ஆகியன தீரும்.

யவக்ஷாரம் எனப்படும் பார்லிச் செடியின் சாரத்தினை அரை முதல் ஒரு கிராம் வரை வெந்நீர் அல்லது நெய்யுடன் உட்கொள்ள வயிற்றுப்புசம் எனும் அகட்டு வாயு (ஆத்மான), மலச்சிக்கல் (ஆனாஹ), சூலை (சூல), பெருவயிறு (உதர), குன்மம் (குல்ம), சிரமத்துடன் சிறுநீர் கழிதல் (மூத்ரகரிச்சர), மண்ணீரல் கோளாறினால் ஏற்படும் செரியாமைதோஷம் எனும் ஆமதோஷம் (ப்லீஹாமய) ஆகியன தீரும்.

வாஸாக்ஷாரம் எனும் ஆடாதோடைச் சாரத்தினை அரைக் கிராம் அளவிலே நீரடன் கொடுக்கக் குன்மம் (குல்ம), இருமல் (காஸ), இரைப்பு (ஸ்வாஸ) ஆகிய நோய்கள் தீரும்.

எருக்க இலையையும், சோற்றுப்பையும் சம அளவிலே எடுத்துக் கொண்டு நாரிகேள லவணம் செய்யப்படும் அதே செய்முறைக்குட்பஃத்தித் தயாரிக்கப்படும் அர்க்கலவணத்தை ஒரு கிராம் அளவில் நீர் அல்லது மோருடன் கொடுக்க குன்மம் (குல்ம), வயிற்றுக் கோளாறுகள் (உதார ரோக), மண்ணீரல் பெருக்கம் (ப்லீஹோதர). ஆகியன தீரும். இவைகள் தவிர கோகிலாக்ஷார (நீர்முள்ளிச்சாரம்), ஸ்னுஹீக்ஷாரம் (சதுரகள்ளிசாரம்), கூஸ்மாண்டக்ஷாரம் (பூசணிச்சாரம்), அஸ்வத்தக்ஷாரம் (அரசமரசாரம்)

ஆகியனவும் மருந்தாகவும், மருந்துச் சரக்காகவும் பயன்படுத்தப்படுகின்றன.

இந்தத் தலைப்பில் குறிப்பிடப்படும் கல்யாணகக்ஷாரம், பனைவிலாதிக்ஷாரம், நாரிகேளலவணம் ஆகியன உண்மையில் க்ஷாரங்களின் செய்முறைப்படி தயாரிக்கப்படாவிட்டாலும் மூல நூல்களில் அவைகள் அப் பெயரிடப்பட்டு வழங்கப்படுவதால் அதே வழிமுறையையொட்டி இங்கே விவரிக்கப்பட்டுள்ளன.

க்ஷாரங்கள் வெண்ணிறமுடையன. காற்றுப்பட்டவுடன் இவைகள் பிசுபிசுப்படைவதால் இவற்றைக் காற்றுப் புகாத கொள்கலன்களில் பத்திரப்படுத்தி வைக்க வேண்டும். க்ஷாரங்களும், லவணங்களும் நீண்ட நாட்கள் வரை கெடாமல் இருககவல்லவை இவைகள் உப்புச்சுவை உடையன.

## கல்யாணக க்ஷாரம்

(அஸ்டாங்கஹ்ருதயம் - அர்ச்சோரோகசிகித்ஸா)

***தேவையான மருந்துகள்:***

| | |
|---|---|
| 1. சுக்கு - சுந்தீ | 50 கிராம் |
| 2. மிளகு - மரீச்ச | 50 கிராம் |
| 3. திப்பலி - பிப்பலீ | 50 கிராம் |
| 4. இந்துப்பு - ஸைந்தவலவண | 50 கிராம் |
| 5. கல்லுப்பு - ஸ்வர்ச்சலவண | 50 கிராம் |
| 6. கருப்பு உப்பு - பிடாலவண | 50 கிராம் |
| 7. கடுகடகாய் (கொட்டை நீக்கியது) - ஹரீதகிபலத்வக் | 50 கிராம் |
| 8. தான்றிக்காய் (கொட்டை நீக்கியது) - பிபீதகீ பலத்வக் | 50 கிராம் |
| 9. நெல்லிமுள்ளி - ஆமலகீ பலத்வக் | 50 கிராம் |
| 10. நாகதந்தி வேர் (நோவாளவேர்) தந்தீ மூல | 50 கிராம் |
| 11. சுத்தி செய்த சேராங்கொட்டை - ஷோதித பல்லாதக | 50 கிராம் |
| 12. கொடிவேலிவேர் - சித்ரக | 50 கிராம் |

*செய்முறை:*

இவைகளைச் சிறு துண்டுகளாக்கிச் சிறிது நசுக்கிப் போதுமான அளவு பசுவின் நெய், பசுவின் மூத்திரம் இவைகளைச் சேர்த்துப் பிசறி மண்பானையிலிட்டு அகலால் பானையின் வாயை மூடிச் சீலை மண் செய்து காய்ந்த பின் சரக்குகள் கருகும் வரை எரித்தெடுத்துப் பொடி செய்து சலித்துக் காற்றுப்புகாத கலங்களில் பத்திரப்படுத்தவும்.

*அளவும் அனுபானமும்:* அரை முதல் ஒரு கிராம வரை நெய்யுடன் இரு வேளைகள் கெதாடுக்கவும்.

*தீரும் நோய்கள்:* மலச்சிக்கல் (விபந்த), வயிற்று உட்புசம் (ஆத்மான), குனமம் (குல்ம), மலமும் மூத்திரமும் பந்தப்படுவதாலேற்படும் நெஞ்சுவலியும் வாந்தியும் (உதாவர்த்த), மூலம் (அர்ஷ), பெருவயிறு (மஹோதரம்), பசியின்மை (அக்னி மாந்த்ய), செரியாமை (அஜீர்ண), நாளங்கள் அடைபடுதல் அல்லது தடைபடுதல், நச்சுக்களை உடலிலிருந்து வெளியேற்றுகிறது.

## பனை விலாதி க்ஷாரம்

(ஸஹஸ்ர யோகம்)

*தேவையான மருந்துகள்:*

1. பனம்பூச்சாம்பல் - தாளபுஸ்ப க்ஷார 1 கி. கிராம்
2. நாயுருவிச்சாம்பல் - அபமார்க க்ஷார 1 கி கிராம
3. நீர் முள்ளிச்சாம்பல் - கோகிலாக்ஷ க்ஷாரம் 1 கி. கிராம்
4. வாழைக்கிழங்குச் சாம்பல் - ரபா க்ஷார 1 கி கிராம

***செய்முறை:*** **இவற்றை நான்கு பங்கு தண்ணிரில் கரைத்துத் தெளிய வைக்கவும். பின்னர் கலங்காது தெளிவை இறுத்துக் கொதிக்க வைத்துத் தண்ணீர் வற்றிய பின் தங்கிய க்ஷாரத்தை ஆறிய பின்னர் பொடித்துச் சலித்துக் காற்றுப் புகாத கொள் கலன்களில் பத்திரப் படுத்தவும்.**

*அளவும் அனுபானமும்:* அரை முதல் ஒரு கிராம் வரை நெய்யுடன் இரு வேளைகள், குழந்தைகளுக்கு பாதியளவு கொடுக்கவும்.

தீரும் நோய்கள்: பெருவயிறு (மஹோதரம்), வீக்கம் (ஸோப), சிறுநீர் தடைப்படல் (மூத்ராசங்க), வியர்வையின்மை ( ), நாளங்கள் தடைபடுதல், செரிமானக் கோளாறுகள் (அஜீரண),

## நாரிகோள லவணம்

(பைஷஜ்ய ரத்னாவளி - சூலரோகாதிகாரம்)

**தேவையான மருந்துகள்:**

1. முற்றிய தேங்காய் - நாரிகோள பல (ஸதோய) ஒரு எண்ணிக்கை
2. இந்துப்பு - ஸைந்தவலவண போதுமான அளவு

*செய்முறை:* இந்துப்பைப் பொடித்துத் தேங்காயின் துளையிட்ட கண்ணின் வழியே உள் நிரப்பி மூடிச் சீலை மண் பூசிப் போதுமான வரட்டிகள் கொண்டு புடமிடவும். ஆறிய பின்னர் ஓ: நீக்கிப் பொடித்துச் சலித்து பத்திரப்படுத்தவும்.

*அளவும் அனுபானமும்:* ஒர கிராம் வரை மோர், நீர் அல்லத திப்பிலி சூரணத்துடன்.

*தீரும் நோய்கள்:* சூலை (சூல), வயிற்றுவலி (குக்ஷிசூல, (அ) உதரசூல), வயிற்றுப் புண்கள் (அ) குடற்புண்கள் (பரிணாமசூல), வயிற்றில் புளிப்பநீர் 9அமிலம்) அதிகரித்தல் (அம்பலபித்த).

# அக்கினி கர்ம விதி

சிகிச்சைக்கு பயன்படும் கருவிகளை நெருப்பில் காய்ச்சி சுடும் முறையாகும்.

**1.நெருப்பினால் சுடுவது:-** கார்ப்பும், உப்பும் மிகுதியாகவுள்ள உடலைக் கொல்லும் காரசிகிச்சையை விட சுடும் சிகிச்சை மேலானது. மருந்துகள், காரசிகிச்சை, அறுவைச்சிகிச்சை செய்தும் தீர்க்க முடியாத நோய்களை நெருப்பினால் சுடும் சிகிச்சையினால் நீக்கிவிடலாம். இவ்வாறு நோய் நீங்கிளால் மீண்டும் திரும்பி வருவதில்லை. இதனாலேயே இச்சிகிச்சை உயர்வானது.

**2. உறுப்புக்களில் சுடுவது:-** தோல்,மாமிசம்,நரம்பு, எலும்புகளை ஒன்றோடொன்று சுட்டும் கெட்டியான தசைநார், மூட்டுக்கள், எலும்பு இவற்றில் இச்சிகிச்சை செய்ய வேண்டும்.

**3. தோலில் சுடுவது:-** கருநிற பரு,முகப்பருக்கள்,தோலில் ஆணிபோலிருக்கும் முளை,வலியுள்ள உணர்வற்ற சுருங்கிய உறுப்புக்கள், கண்களில் கெட்ட நீர் சேர்ந்து கண்ணீர் வடிதல்,ஒற்றைத்தலைவலியுடன் கூடிய கண்நோய், தலை, புருவம், பொட்டு, நெற்றி இவ்விடங்களில் நெருப்பினால் சுடும் சிகிச்சை செய்ய வேண்டும்.

சூரிய காந்தக்கல், திப்பலி, ஆட்டுப்புழுக்கை,பசுவின் பல்,அம்பு, குச்சி போன்ற கருவியால் தோலில் சூடு போடவேண்டும். அபிஷந்தம், அதிமந்தம் ஆகிய கண்நோய்களில் புருவம், பொட்டு, நெற்றி ஆகிய இடங்களை ஊகித்து சுடவேண்டும்.

**4. மாமிசத்தில் சுடுவது:-**

நரம்புசுருட்டல், புரை, குழல், முனையுள்ள மூளைநோய், பவுத்திரம், கண்டமாலை, யானைக்கால், குடல்இறக்கம், அழுகினபுண், புரையோடியபுண், இரத்தக்குழாயில் ஏற்படும் ஆழமான சீழ்நிறைந்த புண், ஊன்தண்ணீர் பெருகின்ற புண் இவற்றுக்கு

ஊசி, குச்சி, கருவி போன்ற சலாகைகளால் நெய், வெல்லம், தேன், தேன்மெழுகு, எண்ணெய், சுத்தமான மாமிசத்திலிருந்து எடுக்கப்படும் ஒருவகை எண்ணெய், பொன் ,செம்பு, இரும்பு, வெள்ளி, வெண்கலம் ஆகிய கருவிகளால் மாமிசம் அடர்த்தியுள்ள இடத்தில் சுட வேண்டும்.

## 5. நரம்புகளைத் தசைநார் போன்றவற்றில் சுடுதல்-

நரம்புகள், எலும்புகள்,மூட்டுக்கள், எலும்பு இவை வெட்டுண்டு அதிக இரத்தம் வெளிப்படும் இடத்திலும் பற்களுக்குச் செல்லும் இரத்தக்குழாய், நழுவிய கண் இமைகள், புருவங்களுக்கு அருகாமை, பார்வை அறவே இழந்திருக்கும் நோய் இவ்விடங்களில் கீறல் சிகிச்சை நன்கு செய்யாததால் இரத்தப் பெருக்கு ஏற்படும். இந்நிலையில் நாவல் கொட்டை போன்ற உருவமுடைய கருவியினால் ஊசி, தேன்மெழுகு, தேன், வெல்லம் இவற்றில் ஏதாவது ஒன்றினால் நரம்புகளில் சூடு போட வேண்டும்.

## நெருப்பினால் சுடும் சிகிச்சைக்கு தகாதவர்கள்

இரத்தக் கொதிப்புள்ளவர்கள், சல்லியம் வெளியில் எடுபடாத நிலையில் உள்ளவர்கள், உடல்முழுவதும் புண் உடையவர்கள், காரசிகிச்சைக்கு தகாதவர்கள் இவர்களுக்கு இச்சிகிச்சை செய்துதான் ஆகவேண்டும் என்றால் வெயிற்காலத்தில் எதிரைடையான செயல்முறைகளைச் செய்து எண்ணெய்ப்பசையுள்ள உணவை அருந்தச் செய்து பின் சுடும் சிகிச்சையை செய்ய வேண்டும்.

## சுடும் முறை:-

முதலில் மங்கல சடங்குகள் செய்து சிகிச்சைக்கு தேவையான பொருட்களைத் தயார் செய்து கிழக்கு நோக்கி அல்லது கிழக்குப்பக்கம் நோயாளியின் பார்வை படும்படி இருக்கச் செய்து நோயாளருக்கு தேவையான உதவியாட்களுடன் மருத்துவர் சிகிச்சை செய்யத் தொடங்க வேண்டும். பின் கருங்காலி, இலந்தை விறகுகளின் கரி முதலியவற்றால் நெருப்பை மூட்டி புகையின்றி அசையாமல் நன்றாக எரிக்க வேண்டும். துருத்தி அல்லது விசிறியினால் விசிறி இரும்பு உருகும் நிலைக்கு தீக்கொழுந்து

உருவாக வேண்டும். பின் இதில் நாவற்கொட்டை போன்ற அமைப்புடைய கருவி போன்றவற்றை தணலில் இட்டு பழுக்க காய்ச்சி நோய் உண்டான இடத்திற்கு ஏற்ற வகையில் வட்டமாகவோ, அரைவட்டமாகவோ, சுவஸ்திக உருவத்திலோ முறைப்படி, எட்டுக்கால் பூச்சி போன்ற அமைப்பிலோ, புள்ளி உருலத்திலோ முறைப்படி சுடவேண்டும். இச்சிகிச்சையின் போது அடிக்கடி நோயாளியைத் தேற்றி நீர் வார்த்து வடு தென்படும் வரை சுடவேண்டும். சுடவேண்டிய இடம் புடைத்தோ, துவாரம் உள்ளதோகவோ,பிளந்தோ இருந்தால் அங்கும் புரையோடியிருக்கும் பற்களின் நாடியிலும், புழுக்களுடன் கெட்டுப்போன புண்களிலும், எண்ணெய், தேன்மெழுகு, தேன், வெல்லம் இவற்றில் ஏதாவது ஒன்றினால் நிரப்பி அதன் பின் சுடவேண்டும். நன்றாக சூடு போட்ட பின் தேனும், நெய்யும் கலந்து அதில் ஊற்றவேண்டும். பின் குளிர்ச்சியானதும், எண்ணெய்ப்பசையுள்ளதுமான பொருட்களைச் சுட்ட இடத்தில் பூசவேண்டும்.

## நன்றாகச்சுட்டதன் அறிகுறிகள்:-

சுடும் போது "சடசட" என்ற ஒலி உண்டாகி,கெட்டநாற்றம் வீச, சுட்ட இடத்தில் தோல் சுருக்கம் ஏற்படுவது நன்கு சுட்டதன் அறிகுறியாகும். தோலில் நன்கு சுட்டதென அறிவதற்கு சிறிதளவு வீக்கம், வலி, உலர்ந்து சுருங்கிய புண் ஆகிய தன்மை காணப்படும். மாமிசம் நன்கு சுடப்பட்டிருந்தால் புண்ணின் வரம்புகள் கருநிறமாகவும், புடைத்தும் இருக்கும். இரத்தம் நின்ற பின் அதிலிருந்து நீர் வடியும். நரம்புகள் நன்கு சுடப்பட்டிருந்தால் அதன் புண் கருப்பு,சிவப்பாகவிருக்கும், கரடுமுரடாக, உறுதியாகவிருக்கும். இவ்வாறு தசைநார்களில் சுடப்பட்டதற்கு அறிகுறிகள் தென்படும்.

***கவனக்குறைவாக சுடப்பட்டது***

1. துத்தம்
2. துர்தக்தம் (முறை தவறிச்சுடப்பட்டது)
3. சம்யக்தம் (சரியளவாகச்சுடப்பட்டது)
4. அதிதக்தம் (அளவுக்குமீறி சுடப்பட்டது)

எனப்பிரிக்கலாம்.

நிறமாற்றம், அதிக எரிச்சல் உண்டானால் அது கவனக்குறைவால் உண்டானது எனவும், கொப்புளம், நெருப்பின் பக்கத்தில் இருப்பது போன்ற எரிச்சல், நாட்பட்டு புண் ஆறுதல் போன்ற அடையாளங்கள் காணப்படின் முறை தவறி சுடப்பட்டது என அறியலாம். சுடும் போது "சடசட" என்ற ஒலி உண்டாகி, கெட்டநாற்றம் வீச, சுட்ட இடத்தில் தோல் சுருக்கம் ஏற்படுவது நன்கு சுட்டதன் அறிகுறியாகும். தாங்கமுடியாத வேதனை, புகை வருவது போன்ற தோற்றம், மாமிசம் தொங்குதல், நரம்பு போன்றவைகளில் தோன்றும் தீமைகள், ஆழமான புண், காய்ச்சல், எரிச்சல், நாவறட்சி, மூர்ச்சை, வாந்தி, அதிக இரத்தப்பெருக்கினால் உண்டாகும் துன்பம், எளிதில் புண் ஆறாது இருத்தல். இவை அதிகம் சுடப்படதன் அறிகுறியாகும்.

எண்ணெய் வகை உடல் முழுவதும் எளிதில் பரவும் தன்மையுடையதாலும், வெகுதூரம் ஊடுருவி உட்புகுவதாலும் அவற்றால் சுடுவது மிகவும் துன்பத்தை தரக்கூடியது. கவனக்குறைவினால் சூடுபட்ட இடத்தில் மறுபடியும் நன்கு சுடவேண்டும். பின் உஷ்ணகுணமுள்ள மருந்தை பயன்படுத்த வேண்டும். இல்லையேல் குளிர்ச்சியினால் இரத்தம் உறைந்து போன பின் உடலில் உஷ்ணம் வெளிவராது. இதனால் வேதனை அதிகரிக்கும். இரத்தம் கட்டிபடும். முறை தவறி சுடப்பட்டால் குளிர்ச்சியும் உஷ்ணமுமான குணங்களைப் பெற்றிருக்கும் மருந்துகளையே முதலில் பயன்படுத்த வேண்டும். பின் நெய் போன்றவற்றால் பூசவும்.

சரியாகச் சுடப்பட்டபொழுது மூங்கில் உப்பு, இத்திமரம், சந்தணம், காவி, சீந்தில் இவற்றை சூரணம் செய்து கலந்து பூச வேண்டும். உஷ்ணம் தணிந்த பின் பித்தத்தினால் ஏற்பட்ட கட்டிக்கு சிகிச்சை செய்வது போல் செய்யவும்.

# சத்திர கர்ம விதி

சத்திர கர்மவிதி எனும் போது ஆயுதங்களைக் கொண்டு செய்யப்படும் சிகிச்சை முறையாகும். ஆந்திரேய மாமுனிவர் கூறியவாறு நிஜம் (வாத,பித்த,கபங்கள் கோளாறடைந்து ஏற்படும் நோய்கள்.

ஆகந்துகம் (வாத,பித்த, கபங்கள் கோளாறடையாமல் எதிர்பாராத விதமாக தோன்றும் நோய்கள்) இந் நோய்களில் மருந்துகளினால் சிகிச்சை செய்தும் பலன் ஏற்படாவிடின் அறுவைச்சிகிச்சை தேவைப்படுகிறது. இந்த நோய் பெரும்பாலும் முதலில் வீக்கத்தில் தொடங்குகிறது. வீக்கம் தோன்றியவுடன் வாதம்,கபம், பித்தம், இரத்தம் இவற்றினுள் இரண்டின் சேர்க்கை அல்லது மூன்றின் சேர்க்கை இவைகளைக் கவனித்து வீக்கம் பழுத்து விடுமோ என்ற அச்சத்தினால் நோயாளிக்கு பட்டினி கிடத்தல், மேற்பூச்சு பூசுதல், மருந்து ஊற்றுதல், இரத்தம் எடுத்தல், குடிநீர், மருந்து,நெய் போன்றவற்றை பூசவும், பருக்கவும் செய்விக்கவும். வாந்திக்கும், பேதிக்கும் கொடுத்து குடலைச் சுத்தம் செய்ய வேண்டும். செய்தும் வீக்கம் தணியாவிடின் அதை தளரச் செய்ய வேண்டும். தளராவிடில் ஒத்தடம் கொடுக்க வேண்டும்.

## பழுக்காத நிலையிலுள்ள வீக்கத்தின் அறிகுறிகள்:-

வீக்கம் குறைவு, உஷ்ணக்குறைவு, வேதனைக்குறைவு, தோலின் நிறம் கெட்டியாகவிருத்தல்.

## பழுத்த நிலையிலுள்ள வீக்கத்தின் அறிகுறிகள்:-

பரபரப்பான நிலை, வேதனை, செந்நிறம், எரிச்சல், நெருப்பு சுட்டது போன்ற எரிச்சல், சுவையின்மை, நாவறட்சி, காய்ச்சல், உணவில் விருப்பமின்மை, தொடமுடியாதநிலை, தூக்கமின்மை.

அந்த வீக்கத்தில் தோய்த்த நெய்யை ஊற்றினால் அது உருகிவிடும். மேற்பூச்சு பூசினால் அது உலர்ந்து விடும். கடுகு அரைத்து பூசினால் தினவு ஏற்படும்.

## பழுத்த பிறகு வீக்கத்தின் அறிகுறிகள்:-

இதில் பொதுவாகதுன்பங்களின் கடுமை குறைந்திருக்கும். வாடியிருத்தல், தோல்கள் தளர்ந்து விடல், சுருக்கம் விழுதல், வெளுத்தல், நடுவில் புடைத்திருத்தல், விரலினால் அழுக்கி விட்டால் மறுபடியும் புடைத்துக் கொள்ளல், வீக்கத்தின் ஒரு புறத்தில் அழுத்தினால் சீழ் மற்றொரு புறம் செல்லுதல். தினவு ஆகியவை தோன்றும். நன்கு பழுத்து வரும் வீக்கத்தில் சொன்ன அறிகுறிகள் தணிந்திருக்கும்.

வாதமில்லாவிடில் வீக்கத்தில் வலி ஏற்படாது. பித்தம் சேராமல் வீக்கத்தில் எரிச்சல் உண்டாகாது. கபம் கலக்காமல் வீக்கம் உண்டாகாது. இரத்தச்சேர்க்கையில்லாமல் செந்நிறம் உண்டாகாது. எனவே இரத்தத்துடன் கலந்த வாதம், பித்தம், கபம் எல்லாம் சேர்த்து வீக்கத்தை பழுக்கச் செய்கிறது.

## அதிகம் பழுத்ததன் அறிகுறிகள்:-

வீக்கம் அதிகமாக பழுத்துவிட்டால் வீக்கத்தினுள் துவாரம் விழுந்து புரையோடும். தோல் மெலிந்து விடும். அவ்விடத்தை வாதம், பித்தம், கபம் எனும் தோஷங்கள் அரித்து விடும். தோலில் சுருக்கம் பரவும். கருநிறம் கொள்ளும். ரோமங்கள் உதிர்ந்து விடும்.

கபத்தினால் உண்டாகும் சில வீக்கங்கள், ஆழமாக புதைந்திருப்பதால், இரத்தம் மட்டும் தான் பழுத்து இருக்கும். அப்பொழுது பழுத்ததன் அறிகுறிகள் வெளிப்படையாகத் தெரிவதில்லை. தோல் நிறத்திற்கு சமமாகவும், வீக்கம் குளிர்ந்தும்,வேதனை குறைந்தும், கல்போல் கடினமாகவும் காணப்படுவதைக் கொண்டு அந்த இடம் பழுக்கவில்லை என்று கருதக்கூடாது. அது இரத்தம் பழுத்த வீக்கம் எனச் சொல்லப்படுகிறது.

இரத்தம் மட்டும் பழுத்த கட்டியை அதன் பழுத்திருக்கும் நிலையை அறிந்து பயந்தவன், முதியவன்,சிறுவன், வலிவற்றவன், அலி. தாதுக்கள் குறைந்தவன், கருத்தரித்தவள், நஞ்சு அருந்தியவன், முகவாத நோயாளி, ஆயுதசிகிச்சை பெற்றுக்கொள்ளும்

சக்தியற்றவன் இவர்களுக்கு நன்றாகப் பழுத்ததன் பயனாக வாத பித்த கபங்களால் துன்புறுத்தும் மூட்டுக்கள், மர்மஸ்தானங்கள் போன்ற இடங்களிலும், குறைந்த வீக்கம் உள்ள இடங்களிலும், தீஷ்ணகுணமும், சீதவீரியமும் உள்ள பொருட்களினால் வீக்கத்தை பிளக்க வேண்டும். மற்றவர்களிடத்தில் ஆயுதத்தினால் கீறி வீக்கத்தை பிளக்க வேண்டும்.

பழுக்காத வீக்கத்தை பிளப்பதனால் நரம்புகள், எலும்புகளை ஒன்றோடொன்று கட்டும் தசைநார் இவற்றிற்கு அழிவு ஏற்படும். இரத்தப் பெருக்கு அதிகரிக்கும். வேதனை அதிகமாகும். வீகக்த்தில் பிளவை உண்டாகும். அல்லது பிளந்த இடத்தில் விஷப்புண்கள் ஏற்படும்.

பழுத்த வீக்கத்தை கீறாவிட்டால் உள்ளே சீழ் அதிகமாகித் தங்கி நரம்புகள். எலும்புகளை ஒன்றோடொன்று கட்டும். தசைநார், இரத்தம், மாமிசம் இவற்றை வீக்கம், எரித்து விடுகிறது.

அறியாமையினால் பழுக்காத வீக்கத்தை அறுப்பவன், பழுத்த வீக்கத்தை அறுக்காமல் இருப்பவன் மருத்துவனல்ல.

## அறுவைச் சிகிச்சையின் பொதுவழி

சிகிச்சை செய்வதற்கு முன் கருவி, ஆயுதம், காரப்பொருட்கள், நெருப்பு, நாவற்பழம்போன்ற அமைப்புள்ள கருவி. பஞ்சு, துணி,இலை, நூல், தோல்பட்டை,தேன்,எண்ணெய்,குடிநீர், பூச்சுமருந்து, கல்கம், ஊற்றுமருந்து, நீர்க்குடம், குளிர்ந்ததும் சூடானதுமான நீருள்ள வாணலிகள், விசிறி போன்ற புண்களுக்கு தேவைப்படும் பொருட்கள் இவற்றை ஒன்று சேர்த்து வைத்துக் கொள்ள வேண்டும். பிறகு நன்னாளில் நல்ல நேரத்தில் தயிர், மஞ்சள் கலந்த அரிசி, உணவு, குடிநீர் பொன்,இரத்தினம் இவற்றை அந்தணருக்கு அளித்து மரியாதை செய்து தன் குல தெய்வத்தை வணங்கச் செய்ய வேண்டும்.

பின் நோயாளிக்கு உணவளித்து வீக்கம் உள்ள இடத்தில் எண்ணெய்ப் பசையுண்டாக்கி வலுவுள்ள மனிதர்களால் பிடிக்கச்

செய்து கிழக்கு நோக்கி படுக்கையில் அமர்த்தியோ அல்லது படுக்கச் செய்தோ கட்டிவிட வேண்டும்.

மருத்துவர் நோயாளிக்கு எதிர்முகமாக இருந்த கொண்டு மர்மஸ்தானங்கள், நரம்புகள், தசைநார், மூட்டுக்கள், எலும்பு. இரத்தக்குழாய் இவற்றை தவிர்த்து ஆயுதத்தை மேலிருந்து கீழ் முகமாக ஒரே முறை விரைவில் சீழ் இருக்குமிடம் வரை பார்த்துக் கீறவேண்டும். பெரிய வீக்கமாக இருந்தால் இரண்டு அங்குலம் கீற வேண்டும். வீக்கம் உண்டான இடத்தின் தன்மைக்கு ஏற்றவாறு கவனித்து 2அல்லது 3 அங்குலம் ஆழம் கீற வேண்டும். கீறப்பட்ட இடத்தில் இடதுகை ஆள் காட்டி விரலால் சீழ் பரவியிருக்கும் வரை துழாவிப் பார்க்க வேண்டும்.

ஆழமாகவும். மாமிசம் அடர்த்தியான இடத்திலும் ஏஷணி என்னும் குச்சி போன்ற கருவியினாலும், இதற்கு எதிரிடையான இடத்தில் ஏஷணி என்னும் குச்சி ோபன்ற கருவியினாலும். இதற்கு எதிரிடையான இடத்தில் தாமரைத் தண்டினாலும். வீக்கத்தின் வாய் அதிகமாகத் தெரியாத இடத்தில் பன்றியின் ரோமத்தினாலும் துழாவி, சீழ் பரவியிருக்கும் இடத்தை அறிந்து கொள்ள வேண்டும். கீழ் துழாவும் கருவிகள் தடையின்றிச் செல்லும் வரை செலுத்தி சீழ் இருப்பதை அறிந்து அவ்விடம் வரை கீற வேண்டும். வீக்கம் புடைத்து மேல் தூக்கியிருக்குமிடங்களில் சீழ் நன்கு வெளிப்படுமாறு வகுத்துக் கீற வேண்டும். சீழ் உள்ளே தங்காமல் இருக்கும்படி செய்ய வேண்டும். சீழ் தங்காமலிருக்க அகலமாகவும் ஆழமாகவும் கீற வேண்டும்.

## அறுவைச் சிகிச்சை செய்யும் மருத்துவருக்குத் தேவையான குணங்கள்:-

அறுவைச்சிகிச்சையில திறமை, விரைவில் செய்யும் கைவன்மை, வியர்வை பெருகாமலும், நடுக்கம் ஏற்படாமலும் இருத்தல், மனதில் குழப்பம் ஏற்படாத தீர்க்கமான அறிவு ஆகியன இருத்தல் வேண்டும்.

## குறுக்காக கீற வேண்டிய இடங்கள்:-

பருவம், கழுத்து, நெற்றிக்கட்டு, கண்களின் கோளம், உதடு, பல்லீற்றின் கீழ்ப்பகுதி, கழுத்துப்பிடரியில் உள்ள நரம்பு, தொண்டை, கழுத்தின் மேல் பகுதி, அக்குள், வயிறு, தொடை இடுக்குகள் ஆகிய இடங்களில் குறுக்காக கீற வேண்டும். மற்ற இடங்களில் குறுக்காக் கீறினால் நரம்புகள், தசைநார் இவற்றின் அழிவும், தாங்கெண்ணாத வலியும் ஏற்படும். மேலும் புண் ஆறுவதற்கு நீண்ட நாளாவதுடன் மாமிச முடிச்சுகள் தோன்றும்.

## அறுவைச்சிகிச்சைக்குப் பின் செய்ய வேண்டியவை:-

அறுவைச் சிகிச்சை செய்த பின் நோயாளியை நீரால் தெளித்து, நல்வார்த்தைகளால் தேற்றி, நாற்புறங்களிலும் புண்ணை நன்றாக விரல்களால் அழுத்த வேண்டும். பின் குடிநீரால் புண்ணை அலம்பி புண்ணிலிருந்து ஊறி வரும் நீரைப் பஞ்சினால் துடைக்க வேண்டும்.

வேதனையை நீக்கக்கூடியதும், காக்கக் கூடியதுமான, குக்கில், உப்பு, வேம்பினிலை, அகில், குங்கிலியம், வசம்பு, வெண்கடுகு, பெருங்காயம் இவற்றை தூள் செய்து நெய்யில் குழப்பி புகை போட வேண்டும்.

பின் தோஷங்களுக்கு தகுந்தபடி வாதத்திற்கு தேனிலும், பித்தத்திற்கு நெய்யிலும், கபத்திற்கு எள்ளு கற்கத்திலும் மருந்தைக் கலந்து இவற்றை துணியில் தடவி வர்த்தியைப் போன்று சுருட்டி புண்ணில் வைத்து எள் கல்கத்தினால் நிரப்ப வேண்டும்.

வாதம், கபம் இவற்றினால் உண்டான புண்களுக்கு 2 அல்லது 3 முறை கட்டுக் கட்ட வேண்டும். பித்தம், இரத்தம் அடிபடுவது இவற்றால் ஏற்படும் புண்களுக்கு ஒரு தடவை மட்டும் கட்டுக் கட்ட வேண்டும்.

ஆயுதத்தால் கீறப்பட்ட புண்களில் தொடர்ந்து வலி இருக்குமானால் அதிமதுரத்தால் தயாரித்த நெய்யை புண்ணில் ஊற்ற வேண்டும்.

குக்கில் போன்ற பொருட்களினால் புகை போடவேண்டும். பொதுவாக அறுவைச் சிகிச்சை செய்து கொண்ட நோயாளி பகலில் தூங்கினால் புண்ணில் வீக்கம், அரிப்பு, செந்நிறம், வேதனை, வலி, சீழ் இவை அதிகரிக்கும். நோயாளிக்கு புண்ணிற்கு ஏற்றபடி உணவு கொடுக்க வேண்டும். ஒரு வருடம் கடந்த சம்பா அரிசி, நவதானியம், கோதுமை, வேர்க்கடலை, பயறு, துவரை இவற்றில் ஏதாவது ஒரு கஞ்சியையும் மாமிச இரசத்தில் பருகுதல் நலம்.

பாலைக்கீரை, ஆரைக்கீரை, அம்மான் பச்சரிசி, சிறுகீரை, கத்தரி, புடல், முள்ளங்கிக்கீரை, மாதுளை, நெல்லி, இந்துப்பூ, இவற்றுடன் நெய் கலந்த உணவை உண்ணச் செய்து சூடாக்கி ஆறியதும் இலகு குணமுள்ள சுடுநீரை சிறிதளவு பருகச் செய்ய வேண்டும். இவ்வாறு செய்வதால் நோயாளிக்கு விரைவில் புண் ஆறிவிடும்.

உணவு சமிபாடடையாவிட்டால் வாத,பித்த, கபம் அதிகரித்து புண்ணில் வீக்கம், வலி, அழற்சி, எரிச்சல், வயிறு உப்பிசம் என்பன தோன்றும். இவ்வித நோயாளிகள் புதுதானியங்கள், உழுந்து. கொண்டக்கடலை, கொள்ளு, மொச்சை, கொட்டை உள்ள தானியம், கரும்ச்சாறு, குளிர்நீர், உலர்ந்த கீரைகள், புளிப்பு, உப்பு, உவர்ப்பு, காரம், நீரில் வாழும் உயிரினங்களின் மாமிசம் உண்ணக்கூடாது. போன்றவை உண்ணக்கூடாது.

தீட்சணமானதும், உஷ்ணவீரியமுள்ளதும், வறட்சித் தன்மையும், புளிப்புச்சுவையும் கொண்டதுமானவை புண்ணிற்கு விரைவில் தீமையை விளைவிக்கும். வெட்டிவெர் விசிறியினால் விசிற வேணடும். புண்ணை உராயவும், சொரியவும் கூடாது. குத்தக்கூடாது. அசையக்கூடாது. இம்முறைகளை கடைப்பிடித்து புண்ணைக் காப்பாற்ற வேண்டும்.

மூன்றாம் நாள் புண்ணைச் சுத்தப்படுத்துதல் போன்ற செயல்களைச் செய்ய வேண்டும். இரண்டாவது நாள் கட்டை அவிழ்த்துவிட்டால் புண்ணில் சிறு முடிச்சுகள் தோன்றும். நாட்பட்ட பின் புண் ஆறும். பொறுக்க முடியாத வலி ஏற்படும்.

மருந்து கலந்த வர்த்தியும், கல்கமும் அதிக எண்ணெய்ப் பசையுள்ள தாகவும், அதிக வறட்சித் தன்மையுடையதாகவும் இருக்கக்கூடாது. வர்த்தியையும், கல்கத்தையும் அதிகத் தளர்த்தியாகவும், அதிக ஆழமாவும், சொரசொரப்பாகவும், தவறாகவும் புண்ணில் இடக்கூடாது.

அதிக எண்ணெய்த்தன்மை உடைய வர்த்தியைப் பயன்படுத்துவதால் புண்ணில் நைப்புத்தன்மை ஏற்படும். வறட்சித் தன்மையுடைய வர்த்தியை உபயோகிப்பதால் புண்ணில் பிளவும், வேதனையும் உண்டாகும். மிக்க தளர்ச்சியாகவிருப்பதால் புண் சுத்தமடைவதில்லை. அதிக ஆழமாக வைப்பதனால் புண் வெலவெலத்து விடும். சொரசொரப்பாகவும், தவறாக வைப்பதனால் புண்ணின் ஓரங்களில் உராய்வு ஏற்படும். புண்ணின் உள்ளே நன்கு செலுத்தப்பட்டுள்ள வர்த்தி புண்ணை விரைவில் சுத்தம் செய்து ஆற்றிவிடுகிறது.

பழுக்காத வீக்கத்தைக் கீறிவிட்டால் அந்தப்புண்ணிற்கு எதிரிடையில்லாத பழுக்கச் செய்யும் குணமுள்ள உணவு வகைகளை உட்கொள்ளச் செய்ய வேண்டும். மருந்துப் பொருட்களினால் ஒத்தடம் கொடுத்து வியர்வையை வரவழைக்க வேண்டும்.

# கட்டிகள்

குருதி நிரம்பிய தசை, வளி வழங்கும் கிழங்குகள் ஆகியவற்றை அளவுமிகுந்துண்பதாலும், கார்ப்புச்சுவையுள்ள பொருட்களையும், சூடு பொருந்திய உணவுகளையும் மிகுதியாகப் புசிப்பதனாலும், வேகங்களை அடக்குவதாலும், புணர்ச்சி மிகுதியாலும், செந்நீர் கேடைந்து அதன் பின்னர் தசை,கொழுப்பு,என்பு ஆகிய உடற்கட்டுகளையும் கெடுத்துக் கட்டிகளையுண்டாக்கி விடும்.

கட்டிகள் தசையையும், தோலையும் குற்றப்படுத்தி நிற்கையில் ''சிறு கட்டிகள்'' என்றும் தோல் முதல் என்பு வரை கெடுதியடைந்திருப்பின் "பெருங்கட்டிகள்" என அழைக்கப்படும்.

கட்டிகள் பழுக்க முன் சற்று வீக்கக்குறைவாகவும், தொட்டுப்பார்க்கையில் கடினமுள்ளதாயும், அற்ப சூடு உள்ளதாகவிருக்கும். நிறவேற்றுமை காணப்படமாட்டாது.

கட்டிகள் பழுத்த நிலையில் வீக்கம் பெரிதாகவும், மிக்க சூடுடையதாகவும், வேதனை கூடவாகவும், பொறுக்க முடியாத நோவிருக்கும். காய்ச்சல், தூக்கமின்மை, பசியின்மை, நீர்வேட்கை ஆகியன காணப்படும்.

### *இக்கட்டிகள்*

1. வெளிப்புறத்தே தோன்றுபவை
2. உட்புறத்தே தோன்றுபவை.

### *மேலும் குற்றத்தைப் பொறுத்து*

1 வளிக்கட்டி
2. அழற்கட்டி
3. ஐயக்கட்டி
4. இரு, முக்குற்ற கலப்புக்கட்டி
5. குருதிக்கட்டி
6. அடிபடுதலாலேற்படும் கட்டி.

உட்புறத்தே தோன்றும் கட்டிகள் எனும் போது தமரகம், பக்கவிலாக்கள், கல்லீரல், கொப்பூழ், மலவாயில், மூத்திரநாளம், தொடையிடுக்கு ஆகிய இடங்களில் தோன்றுபவை. இதில் கொப்புழுக்கு மேலிருக்கும் உறுப்புக்களில் உண்டாகும் கட்டிகள் உடைந்தால் சீழ் வாயின் வழியாகவும், கொப்புழுக்கு கீழிருக்கும் உறுப்புகளில் ஏற்படும் கட்டிகள் உடைந்தால் சீழ் எருவாயின் வழியாக வெளிப்படும்.

இதில் வெளிப்புறத்தே தோன்றும் கட்டிகளில் முக்குற்ற வருப்பைச் சேர்ந்தவை தீராதவை. உட்புறத்தே தோன்றும் கட்டிகளில் சீழானது வாயால் வரக்கூடிய கட்டிகள் தீராதவை.

## சிகிச்சை:-

உட்புறத்தே சாரம், குருதியாகிய உடற்கட்டுக்கள் கேடடைவதினாலும் குற்றங்களின் வேற்றமையாலும் கட்டிகள் ஏற்படுவதால் அவற்றின் குற்றங்களை நீக்க வேண்டும். இதற்காக மலம், சலத்தை வெளியேற்றல். வியர்வையை வெளியேற்றல். உடலுக்கு எண்ணெய்களை மெற்பூச்சாக பூசல்.

## உட்பிரயோகமாக:-

1.சாறணைக் கள்ளித்தைலம் (தேரன் தைலவர்க்கச் சுருக்கம்)
10-40 துளி பன்னீரில் கொடுத்தல்.

2.கழற்சியெண்ணெய் (தேரன் தைலவர்க்கச் சுருக்கம்):
10மிலீ கொடுக்கலாம். அல்லது வெள்ளை எண்ணெய், வாதநாசத்தைலம் போன்றவையும் உபயோகிக்கலாம்.

இரத்த சுத்தி செய்ய கந்தக இரசாயணம் (100-200மிகி) , கந்தகமெழகு (2-3மிளகளவு), கந்தகசுடர் தைலம் 5-10 துளிகள் 5-7 நாட்களுக்க காலை, மாலை கொடுத்தல்.

பின் நடைமருந்தாக பறங்கிப்பட்டை இரசாயணம் 5கிராம் கொடுத்தல்.

## *அதற்கு ஒற்றடமாக*

**வளிக்கட்டிக்கு:-** ஆமணக்கிலை. தழுதாழையிலை, ஊமத்தையிலை இவற்றிக்கு ஆமணக்கு எண்ணெய் விட்டு வதக்கி பாவிக்கலாம். பித்த கட்டிக்கு ஒற்றடமிடக்கூடாது.

**ஐயக்கட்டிக்கு:-** தவிடு. மஞ்சல், செங்கற்கள் இவற்றை வறுத்து ஒற்றமிடலாம்.

***தொக்கணம்:-*** தைலத்தை தடவியேனும் தடவாமலேனும், தடவித்தடவிக் கொடுத்து வர கட்டி கரையும்.

**குருதி வாங்கல்:-** இதற்கு அட்டையினை கட்டியைச் சுற்றி விடவும்.

***மேற்பூச்சு- 1:-*** -

1. கடுகு -5 கிராம்
2. காயம் -5கிராம்
3 .வாளம் -5கிராம்
4. மூசாம்பரம் -5கிராம்
5. அபின் -5கிராம் இவற்றை எருக்கிலைச் சாற்றில் அரைத்துப் பூசவும்.

***மேற்பூச்சு-2:-***

1. மூசாம்பரம்
2. கருஞ்சீரகம்
3. காயம்
4. பூண்டு
5. நாபி
6. கொடிவேலி வேர்ப்பட்டை

சம எடை எடுத்து திருகுகள்ளிச் சாறு விட்டு அரைத்து பூசல்.

கற்சுண்ணாம்பு, வெங்காயம், வசம்பு, பேர்ப்பீக்கு, முருங்கைப்பட்டை, சமவெடை எடுத்து எருக்கம்பாலில் அரைத்து பூசல்.

கற்சுண்ணாம்பு, கோழிமுட்டை வெண்கரு இரண்டையும் சேர்த்து அரைத்துப் பூசுவதால் கட்டிகளும் வீக்கங்களும் கரைந்து விடும.

**கட்டி பழுத்து வரும் போது பயன்படுத்தும் பூச்சுக்கள்:-**

1. விடமூங்கிற் கிழங்கை நெருப்புத்தணலில் வைத்துச் சுட்டுக் கடைந்து வைத்துக்கட்டலாம்.

2. அன்னபேதியைத் தண்ணீர் விட்டரைத்துச் சுடவைத்து மேல்பூசலாம்.

## கட்டிகளையுடைக்க வழங்கும் பூச்சுகள்:-

1. 1.பால்சாம்பிராணி - 4பங்கு
2.படிகாரம் - 2பங்கு
3.சூடன் - 4பங்கு

சோற்றுடன் சேர்த்துக் கட்டியின் மேல் பூசலாம்.

2. இலிங்கம்- 20 கிராம் எடுத்து எண்ணெயிலரைத்து அத்துடன் 60 கிராம் குங்கிலியத்தை எண்ணெயிலுருக்கி, அத்துடன் 5 கிராம் சூடனை உருக்கிய மெழுகிற் சேர்த்து பின் எல்லாவற்றையும் ஒன்று சேர்த்து நன்றாக அரைத்துக் கட்டிகட்குப் பூசக் கட்டிகளுடையும்.

## அறுவைச்சிகிச்சை:

நன்றாக பழுத்த கட்டிகளை கத்தி கொண்டு அறுத்தல் வேண்டும். அவ்வாறு செய்யாவிடின் சீழ் உட்புற உடற்கட்டுகளில் மேலும் மேலும் பரவி அவற்றை அழித்து விடும்.

நேரமறிந்து கத்தியை மருத்துவன் பயன்படுத்தல் வேண்டும். குழந்தைகளின் கட்டிகள், வயது சென்றவர்கள், மெலிந்தவர்கள், கோழை நெஞ்சுடையவர்கள் ஆகியவர்களில் கார மருந்தினால் உடைய வைப்பதே முறையாகும்.

கீறுவதற்கு பக்குவமடையாத கட்டிகளைக் கீறுவதால் பொறுக்க முடியாத துன்பமும், குருதிப்பெருக்கும் உண்டாவதுடன், மிகச்சிறிய முளையுண்டாகி அவ்விடத்தில் உருவாகிய குற்றம் மற்றய உடற்தாதுகட்கு பரவிப் பதனழியத் தொடங்கும்.

# புண்கள்

கட்டியுடைந்த பின் விரணமாகி விடும். அதுமட்டுமன்றி கருவியனாலும், அடிபடுவதாலும், நெருப்பினாலும், பிறவுயிர்களின் கடிகளாலும் உடம்பில் புண்கள் தோன்றும். இதனால் உடலில் உள்ள குற்றத்தினால் உண்டாகும் புண்ணென்றும், அடிபடுவதால் உண்டாகும் விரணமென்றும் இருவகையாகப் பிரிக்கலாம். இதையே துஷ்ட விரணம் - 16, அதுஷ்ட விரணம் -45 எனக்கூறப்படுகிறது.

குற்றத்தினால் உண்டாகும் புண் (துஷ்ட விரணம்) -16

1. வளிப்புண்
2. அழற்புண்
3. ஐயப்புண்
4. வளிபித்தப்புண்
5. வளிஐயப்புண்
6. பித்தஐயப்புண்
7. முக்குற்றப்புண்
8. குருதிப்புண்
9. குருதிதீப்புண்
10. குருதிவளிப்புண்
11. குருதிஐயப்புண்
12. குருதிவளிபித்தப்புண்
13. குருதிவளிஐயப்புண்
14.. குருதிபித்தஐயப்புண்
15. வெளுத்த குருதிப்புண்
16. வெளுத்த முக்குற்றப்புண்

வளிப்புண்ணில் முகம் கருப்பு,சிவப்பு, சாம்பல், வெள்ளை நிறங்களைப் பெற்றிருக்கும். இதிலிருந்து வடியும் நீரானது வெண்ணிறமாகக் காணப்படும். இவ்விடத்தில் தசை கரைதல்,நோதல்,குத்தல், வறளல்,உள்ளிடத்தில் கிறுகிறுப்பு ஆகிய குணங்கள் காணப்படும்.

அழற்புண்ணில் மஞ்சள், செம்மை, கருஞ்செம்மை, வெண்செம்மை ஆகிய நிறங்களைப் பெற்றிருக்கும்.. இதிலிருந்து வடியும் நீரானது செந்நிற வெண்மையாகவிருக்கும். எரிச்சல் இருக்கும். நோவும், நமைச்சலும் காணப்படும்.

ஐயப்புண்ணில் நமைச்சல், வெளுத்து, கெட்டியாகக் காணப்படும். இதிலிருந்து வரும் நீரானது வெளுத்து குழம்பைப்போல் பாயும். மிகுதியாக வடியும். குத்தலோடு நோவிருக்கும்.

ஆறிவரும் புண்களில் சாம்பலும் மஞ்சளும் கலந்த நிறத்துடன் இருக்கும். நீர்க்கசிவின்றி அதன் ஓரங்கட்கருகில் சற்றுத்

தடித்திருக்கும். சாம்பல் நிறத்துடன் சிறு கறுப்புப்புள்ளிகள் போன்று காணப்படும். ஆறிவரும் ஓரங்கள் நோய் காணப்படாத தோலின் நிறத்தைப் பெற்றிருக்கும்.

## தீரும் தீராதவை:-

1.நோயாளியின் ஏழு உடற்கட்டுக்களின் நிலையைப் பொருந்தியதாயிருக்கும். எவ்வாறெனில் சாரம், செந்நீர் முதலிய தம்நிலையில் கூடியாவது குறைந்தாவது இருத்தல். வளி, பித்த,ஐயங்கள் தன்னிலை வளர்ச்சியடைந்து கலந்திருத்தல்.

2. நோயின் வயது.

3. புண்ணேற்பட்ட உறுப்பு உதாரணமாக காலின் முன் பக்கம், தொடையிடுக்கு, அக்குள், குதிக்கால் ஆகிய இடங்களில் தோன்றும் புண்கள் மற்றய இடங்களில் உண்டாகும் புண்களைப் போல விரைவில் குணமடையா.

4. மர்மநிலையில் உண்டாகும் புண்கள் குணப்படா.

5. புண்ணானது வட்டவடிவமுள்ளதாகவும், முக்கோண அமைப்பைப் பொருந்தியிருப்பினும், நான்கு மூலைகளுள்ளதாகவும் இருப்பின் தீரும்.

6. கண். கடைக்கண், மூக்குத்துவளை,எயிறு,மார்பு,நகில்,பூட்டுக்கள் அரிதிற் தீருவனவாகும்.

7. மதுமேகம், சயம்,பெருநோய் ஆகியவற்றால் வருந்துபவர்களில் உண்டாகும் புண்ணானது மிகக் கொடுமையுடையதாகும்.

8. தொடக்கத்தில் தகுந்த மருத்துவம் செய்யாது தவறுவதின் காரணமாகக் கெடுதியடைந்த புண்களும் விரைவில் குணமாகா.

9. நன்கு அறுவை முறைகளைக் கற்றுணராதவனும், கைதேர்ச்சியற்ற மருத்துவன் பரிகரிக்கும் விரணங்களும் மிக அரிதிற் தீரும்.

10. கிரந்தி முதலியவற்றினால் உண்டாகும் புண்களும், ஊண் கசியும் புண்களும், வரம்புயர்ந்திருக்கும் புண்களும், அடிப்புறம் பள்ளமாயிருக்கும் புண்களும், பிளப்புடன் கூடிய புண்களும் மருத்துவத்தில் குணமடையாவாம்.

11. உச்சி, விரல்நுனி, வர்மங்கள், எலும்பு,எலும்பினுள்ளிருக்கும் மூளை தெரியக்கூடிய நிலமையிலிருக்கும் புண்களும் உடலில் உட்புறத்திலே ஆசனங்கள் கெடுதியடைவதால் உண்டாகும் புண்களும் மருத்துவத்திற்கு வயப்படா.

12. விரைவில் ஆறக்கூடுமெனக் கூறப்பட்டுள்ள இடங்களிலேற்படும் புண்களும், ஏழு உடற்கட்டுகளும் அக்கினி வன்மையில் குறைந்திருக்குமானால் விரைவில் குணப்படா.

## மருத்துவம்:-

நோயாளியை ஓரிடத்தில் தனிமைப்படுத்த வேண்டும் படுக்கை நன்கு விசாலமுள்ளதாகவும், மேடு பள்ளமில்லாதிருக்க வேண்டும். அறை சத்தமானதாக கிருமி தொற்றாதவாறு இருக்க வேண்டும். நல்லகாற்று, வெளிச்சம் உள்ள இடமாக இருத்தல் வேண்டும். அத்துடன் நாளும் புகை போட்டு கழுவிச் சுத்தம் செய்து வைத்தல் வேண்டும். கெட்டமுகிய புண்கள் துர்நாற்றத்துடன் இருக்கையில் கந்தகம், அகில், தேவதாரு இவற்றினாலான புகையைப் பயன்படுத்தலாம். தொற்று நோயுள்ள காலத்தில் கண்டங்கத்தரி, பேய்ப்புடோல்,பேய்ப்பீர்க்கு, உலர்ந்த வேப்பிலை இவைகளைப் பாவிக்கலாம். இதைவிட கார்போகவரிசி, பளிங்குச்சாம்பிராணி, பூனைக்கண் குங்கிலியம் இவைகளும் புகை போட பாவிக்கலாம்.

## உள் மருந்துகள்:-

உடலில் உள்ள குற்றங்களையும் உடற்கட்டுக்களையும் தூய்மைப்படுத்தும் வகையில் மலத்தை முறையாகக் கழிக்க வேண்டும். எக்குற்றம் தன்னிலை பிறழ்ந்திருக்கிறதோ அதற்கேற்ற பேதி மருந்துகளை கொடுத்து மலம் போக்கல் வேண்டும். சாரம் முதலிய உடற்கட்டுக்கள் தம் வன்மையில் குன்றியிருந்தால்

அவற்றை வளர்ப்பதற்கான மருந்துகளை பயன்படுத்த வேண்டும். சாரம் கெட்டிருக்கும் போதும், தோல் பிணிக்கப்பட்டிருக்கும் போதும் கந்தகம் சேர்ந்த மருந்துகளையும் பறங்கிப்பட்டை சேர்ந்த மருந்துகளையும் வழங்கலாம்.

செந்நீர் கெட்டிருக்கும் போது இரும்பு, கந்தகம், ஈயம், செம்பு, நீரடிமுத்து, சேங்கொட்டை ஆகியவை சேர்ந்த மருந்துகளை வழங்க வேண்டும்.

தசை, மூளை இவை கேடடைந்த நிலையில் இரசம், செம்பு,முதலியவற்றால் முடித்த மருந்துகளைக் கொடுக்கலாம்.

## வெளி மருந்துகள்:-

1. புண்ணைத் தூய்மை செய்தலும். பக்கங்களில் இருக்கும் அழுக்கை அகற்றலும்.

*வளிப்புண்ணுக்கு (வாதம்):-* பாலுள்ள மரங்களின் குடிநீரைக் கொண்டு கழுவி தூய்மை செய்தல். இதற்கு ஆல், அரசு, அத்தி, இத்தி, நாவல் ஆகியவை வகை 12 கிராம் எடுத்து மொத்தம் 60 கிராமிற்கு 8 கோப்பை நீர் விட்டு 1/8 ஆக வற்ற வைத்து எடுத்த குடிநீரால் கழுவலாம்.

*அழற்புண் (பித்தம்):* இதற்கு கைப்பும், இனிப்பும் பொருந்திய குடிநீரையே பயன்படுத்த வேண்டும். இதற்கு அதிமதுரம், நிலவேம்பு, வேம்பு, பேய்ப்புடோல் இவை பயன்படும்.

*ஐயப்புண் (கபம்):-* சிறிது காரமுள்ள பொருள்களும், துவர்ப்புப் பொருளும் சோத்துச் செய்யப்பட்ட குடிநீர் பயன் தரும். இதற்கு திரிகடுகு, திரிபலை சேர்ந்த குடிநீர் உதவும். இதை விட படிகார நீர் பாவிக்கலாம்.

*குணப்படுத்துதல்:-*

புண்ணிலிருந்து மலினங்களையும், பதனழிந்த உடற்கட்டுக்களையும் வெளிப்படுத்த வேண்டும். இதற்காக

ஐயப்புண்ணில் காரங்களையும், அழற்புண்ணில் களிம்புகளையும், வளிப்புண்ணில் நெய்ப்புத்தன்மை பொருந்திய புற்கைகளையும் வழங்கலாம்.

நாயுருவியுப்பை ஐயப்பண்ணிலிருக்கும் கெட்ட தசைகளை நீக்க வழங்கலாம்.

அழற்புண்ணில் காணப்படும் கெட்ட தசையை நீக்குவதற்கு துரிசை உபயோகித்து அன்னபேதி நீரினால் கழுவவேண்டும்.

வளிப்புண்ணில் கெட்ட தசை தானாகவே வெளிவந்து விடும்.

## புண்ணை குணப்படுத்தும் மருந்துகள்:-

ஐயப்புண்ணைத் தூய்மை செய்து பின் துவர்ப்புள்ள குடிநீரில் துணித்துண்டை நனைத்து வைத்து கட்டலாம். சிலர் தேனையும் பயன்படுத்துகின்றனர்.

பித்தப்புண்ணில் மருந்து நெய்களைப் பயன்படுத்தலாம். வளிப்புண்ணில் எண்ணெய் பயன்படும். வளிப்புண், பித்தப்புண் இவ்விரண்டிலும் அமிர்தமெழுகு, வீரவெண்ணெயும், ஐயப்புண்ணில் வெங்காரப்பசையும், மாசிக்காய், கடுக்காய், களிப்பாக்கு இவற்றால் ஆகிய பொடியும் தூவு மருந்தாக வழங்கலாம்.

## சிலைப்புண்:-

இதனை நாடி விரணம் என அழைப்பர். இவை பெரும்பாலும் நாடிநரம்புளிலுண்டாகும். அன்றியும் தசைநார்களின் இடைச் சந்துகளிலும் உண்டாகும். இவை தொடக்கத்தில் சிறுகட்டிகள் போலவே தோன்றும்.

நாடி நரம்புகளில் பிறக்கின்ற கட்டியானது பழுத்து உடைந்து நச்சுத்தன்மையடையின் அந்த நரம்பைப்பற்றிய தசை முதற்கொண்டு என்புவரை சிலையோடும்.

சிலைப்புண்கள் ஒருகால் புரையோடி வேறொரு இடத்தில் இன்னொரு முகம் காண்பித்தலுண்டு. இதை மெழுகுத்தைலம், புங்கெண்ணெய் இவ்விரண்டையும் ஓரளவாகக் கலந்து புண்ணில் பீச்சவேண்டும்.

ஈரிடத்தில் கட்டியுண்டாகியோ ஓரிடத்தில் கட்டியுண்டாகியோ உடைந்துண்டாம் சிலைப்புண்கள் வெள்ளிச் சலாகை கொண்டு புண்ணின் ஆழத்தை அறிந்து கொள்ள வேண்டும். பின் இதனை காரச்சீலை கொண்டு பெருக்க வேண்டும்.

நாயுருவியுப்பு, எள்ளுக்காய்தோலுப்பு இவ்விரண்டையும் வேப்பமுத்து நெய் அல்லது எண்நெய்யிற் கலந்து துணித்துண்டிற்றோய்த்து வைக்கலாம். இவ்வாறு செய்யின் குருதி மிகுதியாய் பெருகுமானால் உடனே அதை நிறுத்தி விடவும்.

கெட்ட ஊன் வளர்ச்சி இருப்பின் மேலும் இம்மருந்தையே வழங்கலாம். கெட்ட ஊனில்லாதிருப்பின் புண்ணையாற்றக் கூடிய மருந்தை பயன்படுத்த வேண்டும். அவை மயில்துதத்தம், ஊமத்தச்சாறு, குப்பைமேனிச்சாறு, தெங்குநெய் இவை சேர்த்து காய்ச்சிய மருந்தாயின் மிக்க பலன் தரும். ஏனெனில் கெட்ட ஊன் வளர்ச்சியைக் கரைப்பதற்கு புண்ணை ஆற்றுவதற்கும் வன்மையுடைய பொருள்கள் சேர்க்க வேண்டும்.

அல்லாமலும் எருவாயிலூண்டாம் புண்கள் பெரும்பான்மை நோயுள்ளதால் அதனை தணிக்கக்கூடிய தழைகளும் சேர்ந்தள்ளதாயிருத்தல் நலம். மேற்கூறிய பொருட்களில்

1. துரிசு கெட்ட ஊன் வளர்ச்சியைத் தடுக்கும்.
2. ஊமத்தை துன்பத்தைக் குறைக்கும்.
3. தேங்காய் நெய் புண்ணையாற்றும்.
4. குப்பைமேனி கிருமியை அணுகவெட்டாது.

மேற்கூறியவாறு சிலைப்புண்ணேற்படின் அதை வெள்ளிச்சலாகை கொண்டு நிதானித்த பின் காரநூல் கொண்டு

அதனை அறுத்துவிட வேண்டும். இச்சிலைப்புண்ணானது எருவாய் கருகிருப்பின் சலாகை அதன் வழியாகச் செலுத்தியதனை எருவாயிட் புறத்தில் வரும்படி செய்ய வேணடும். அதன் பின் காரநூலை தகக்வாறு செலுத்தி எருவாயின் உள்வழியாக இழுத்தெடுத்தல் வேண்டும். பின்னர் இருபக்க முனைகளையும் சேர்த்து முடியவேண்டும். அறுபட்ட புண்ணை ஆற்றுவதற்கு புங்கு நெய்யை பயன்படுத்த வேண்டும்.

காரநூல் செய்வதற்கு உத்தாமணிப்பால், எருக்கம்பால், துரிசு ஓரெடை இப்பாலில் மயில் துதத்தையும் மஞ்சளையும் இழைத்து அதில் நூலை நனைத்து காய வைக்கவும்.

பொதுவாக புண்களில் இலையான் மொய்ப்பதால் அதில் முட்டைகளை இட ஏதுவாகிறது. இந்நிகழ்வினால் 2-3 நாட்களில் புண்களின் மேல் புழுக்கள் காணப்படும். இப்புழுக்கள் எண்ணிக்கையில் அதிகரித்து உருவத்தில் நாளுக்கு நாள் பெருக்க ஆரம்பிக்கும். இதனால் புண்கள் ஆழமாகக் காணப்படுவதால் தாங்கெண்னா வலி, ஊர்வன போன்ற உணர்வுகள் காணப்படும். இதற்கு தேப்பந்தைலம் நல்ல பலனளிக்கும். காலை, மாலை தேப்பந்தைலம் வைத்துக் கட்டி பின் சிரங்கெண்ணை :- துத்தம், துரிசு,கந்தகம், கார்போகவரிசி, வேம்பாடல், மிருத்தார்சிங்கி, கிருமிசத்துரு வகை சம எடை எடுத்து தேசிப்புளி விட்டு வேப்பெண்ணெய், தேங்காய் எண்ணெயில் காய்ச்சவும்.

அல்லது புங்கம் எண்ணெய் வைத்து கட்டவும். உள் மருந்தாக கந்தகஇரசாயணம் 500மிகி- 1கிராம் வரை பாவிக்கலாம்.

இரசகெந்தி மெழுகு உழுந்திடை காலை, மாலை பனைவெல்லத்தில் பொதிந்து 7 நாட்களுக்கு சாப்பிடவும். பல்லில் படாமல் பார்த்து கொள்ளவும் பால்,சொறு பத்தியம் கொள்ளவும். மதுமேக நோயாளி (நீரிழிவு ) இல் புண்கள் ஏற்படும் போது தொடர்ந்து சிகிச்சிக்காவிட்டால் கால்களில் கட்டி (Abses) தோன்றும். இது நாளடைவில் சிலை (Fistula) ஆக மாறும். இதனை சிகிச்சிப்பதற்கு கத்தியால் இரு துவாரங்களையும் ஒன்றாக

இணைக்கும் வரை கீற வேண்டும். பின் அதற்கு திரி வைக்க வேண்டும். இந்நோயாளிகளில் நீரழிவு நோயை உறுதிப்படுத்துவதற்கு சலத்தில் சீனிப்பரிசோதனை செய்து பின் இரத்தத்தில் சீனி ப்பரிசோதனை செய்ய வேண்டும். இரத்தத்தில் உள்ள ஹீமோகுளோபின் அல்பா பரிசோதனை என்பன செய்து நீரழிவு நோயை உறுதி செய்ய வேண்டும்.

பின் நீரழிவிற்கு சிகிச்சை செய்ய வேண்டும். நீரழிவு குணமாகவே புண்கள் மாறுவது துரிதமாகும்.

## நீரிழிவிற்கு

1. குடிநீர:- கடல்இறாஞ்சிப்பட்டை, வில்வம் பட்டை, நாவல்பட்டை, திரிபலை, சீந்தில், ஆவாரை சமூலம் ஆகியவை சம எடை எடுத்து குடிநீராக்கி காலை, மாலை குடிக்கவும்

2. சிறுகுறிஞ்சா, நெல்லிக்காய், சீந்தில், வகை சமஎடை கடல்இறாஞ்சிப்பட்டை அரைப்பங்கு, மஞ்சல் கால்பங்கு கருவேப்பிலை அரைப்பங்கு சேர்த்து சூரணமாக்கவும். 3கிராம் காலை, மாலை கொடுக்கவும்.

# தையல் போடும் முறை

தையல் போடத் தகுந்த புண்ணில் அசையும் எலும்பு, தீயபொருள், தூசி, புல், ரோமம், உலர்ந்த இரத்தம் இவற்றை நீக்கி, பிளத்தலும், தொங்குகிறதுமான மாமிசத்தையும், மூட்டுக்களையும் எலும்புகளையும் அதன் உரிய இடத்தில் சரியாகப் பொருத்தி, இரத்தம் நின்றபின் புண்ணிற்கு ஏற்றவாறு தசைநார், நூல், ரோமம் இவற்றுள் ஏதாவது ஒன்றை ஊசியில் கோர்த்துத் தைக்க வேண்டும்.

## தையலின் வகை:-

1- கோஷ்பணிகா - பசுவின் முகம் போல அல்லது பாம்பின் படம் போல் தைப்பது.

2- துன்னசேவனி - கிழிந்த தோலைத் தைக்கும் முறை.

3- க்ரந்தி பந்தனம் - இரு பகுதிகளையும் சேர்த்து தைத்து முடிச்சுப்போடுதல்.

4- .வேல்லிதம்- கொடிபோல் வளைவாகத் தைதத்தல்.

மிக நெருக்கமாகவும், மிக்க இடைவெளிவிட்டும், சதையைச் சிறிதளவு பிடித்துக்கொண்டோ, அதிககளவு பிடித்துக் கொண்டோ தைக்கக்கூடாது. நன்றாக தைக்கப்பட்டதை அறிந்து அஞ்சனக்கல், அதிமதுரம், வேம்பு, பாச்சோத்தி, ஞாழல், ஆனைவழங்கியின் பழம், பட்டுத்துணியின் சாம்பல் இவற்றை பொடியாக்கி தேனும், நெய்யும் கலந்து தைக்கப்பட்ட இடத்தில் பூசி முன் போல் சுட்டுக்கட்ட வேண்டும்.

## தையல் போடத்தகாத இடங்கள்:-

தொடை இடுக்கு, மார்பு, அக்குள் இவற்றிலும், அசைவுள்ள உறுப்புக்கள், மாமிசம் அடர்தியாக இல்லாத இடங்கள், வாதம் சஞ்சரிக்கக்கூடிய உறுப்புள்ளிலுள்ள புண், இரத்தமும், சல்லியமும் உள்ளடங்கியிருக்கும் புண், நஞ்சு, நெருப்பு, காரப்பொருட்கள் இவற்றால் ஏற்பட்ட புண் இவ்விடங்களில் தைக்ககூடாது.

## தையல் போடத் தகுந்த புண்கள்:-

கொழுப்பினால் உண்டான புண், நன்கு கீறப்பட்டு சுத்தம் செய்யப்பட்ட புண், கபத்தினால் ஏற்பட்ட முடிச்சு, சிறுமடல் உள்ள காது, அடியினால் எதிர்பாராத முறையில் தோன்றிய புண், இந்த இடங்களில் தைக்க வேண்டும். மேலும் தலை, நெற்றி, கண் கோளங்கள், காது, மூக்கு, கன்னம், உதடு, பிடரி, வயிறு, கை, பின்பக்கம், ஆசனவாய், ஆண்குறி, அண்டகோசம், அசையாத அடர்த்தியான மாமிசம் உள்ள இடம் இவற்றிலுள்ள இடங்களைத் தைக்க வேண்டும்.

## புண்ணில் கட்டுப்போடும் முறை

கோசம், வாமம், உத்சங்கம், சுவஸ்திகம், அனுவேலிதம், உத்தோலி, மண்டலம், ஸ்ததிகம், யமகம், சுட்லா, சீதம், விபந்தம், விதானம், கோஷ்பணம், பஞ்சாங்கி என கட்டுகள் பதினைந்து வகைப்படும்.

1. கோசம் - விரலின் கணுக்களில் கட்டுவது
2. தாமம் - தொடை, இடுக்குகள் போன்ற இக்கட்டான இடங்களில் கட்டுவது.
3. உத்தஸங்க பந்தம் - முறிந்து தொங்கும் கைகளில் கட்டும் கட்டாகும்.
4. சுவஸ்திகம்:- மூட்டுக்கள், தசைநார்,எலும்பு, நரம்பு இவை ஒன்று சேருமிடம், புருவம், மார்பகத்தின் நடுப்பகுதி, அக்குள், கண், கன்னம், காது இவ்விடங்களில் கட்டப்படுவதாகும்.
5. அனுவேலிதம்:- கை,கால்களில் கட்டப்படுவது.
6. உத்தோலி:- கழுத்து, ஆண்குறியில் போடப்படும் கட்டு.
7. மண்டலம்:- உருண்டையான உறுப்புக்களில் இடப்படும் கட்டு.
8. ஸ்தகிகம்- கட்டைவிரல், விரல்கள், ஆண்குறியின் நுனி, சிறுநீர்தங்கியுள்ள விரை, குடலிறக்கம் இவ்விடங்களில் கட்டப்படும் கட்டாகும்.
9. யமகம்:- அருகில் உள்ள 2 புண்களுக்கு கட்டும் கட்டு.
10. கட்வா:- தாடை, பொட்டு, கழுத்து இவ்விடங்களில் போடப்படும் கட்டுக்கள்.

11. சீனம்:- கண்களின் ஓரங்களில் கட்டப்படுவது.
12. நிபந்தம்:- வயிறு, தொடை, பின்பக்கம் இவ்விடங்களில் கட்டப்படுவதாகும்.
13. விதானம்:- தலை போன்ற அகலமான உறுப்புக்களில் கட்டப்படும் கட்டு.
14. கோஷ்பணம்:- மூக்கு, உதடு, முகவாய்க்கட்டை, தொடைகள் இவ்விடங்களில் இடப்படும் கட்டு.
15. பஞ்சாங்கி:- கழுத்துக்கு மேல் உள்ள உறுப்புக்களில் கட்டும் விதம்.

இடங்களுக்கு தக்கவாறு கட்டுக்களை அமைத்துக் கொள்ளல் வேண்டும். புண்களுக்கு துன்பம் ஏற்படாதவாறு கட்டுகளின் முடிச்சு இருக்க வேண்டும்.

அழுகினபுண், ஆழமானபுண் உள்ள இடங்களில் வலது புறமாகவோ அல்லது இடதுபுறமாகவோ கட்டுப்போடலாம். பொதுவாக எல்லா இடங்களிலும் அழுத்தம், தளர்தல், சமம் என மூவகையான கட்டுக்ககைப் பயன்படுத்தலாம்.

கபத்தினாலும், வாதத்தினாலும் தோன்றிய புண்களுக்கு கட்டு இறுக்கமாக அமையவேண்டும். பித்தத்தினால் ஏற்படும் புண்களுக்கு இலேசாகவும், தளர்ச்சியாகவும் கட்டுப்போட வேண்டும். வாதபித்தத்தினாலும், கபபித்தத்தினாலும் உண்டான புண்களுக்கு சமமாகக் கட்டுப்போட வேண்டும்.

இவ்வாறு பின்பக்கம், அக்குள், தொடை இடுக்கு, தொடை, தலை இவ்விடங்களில் இறுக்கமாக கட்டுப்போட வேண்டும். கை,கால்,முகம், காது, கழுத்து, ஆண்குறி,விதை, பின்பகுதியின் இருபக்கங்கள், வயிறு, மார்பு இவ்விடங்களில் சமமாக கட்டுப்போட வேண்டும்.

கண்களின் மூட்டுக்களில் தளர்ச்சியாகக் கட்டு அமைதல் வேண்டும். தளர்ச்சியாக கட்டுப்போட வேண்டிய இடத்தில் வாதபித்தத்தின் புண்கள் ஏற்பட்டால் சமமான கட்டையும், சமமாக

கட்டுப்போட வேண்டிய புண்ணில் வாதகபத்தினால் புண்கள் உண்டானால் இறுக்கியும் கட்ட வேண்டும்.

இறுக்கிக் கட்ட வேண்டிய இடத்தில் வாத கபத்தினால் புணகள் தோன்றுமாயின் மிக இறுக்கமாகவும் கட்டுப்போட வேண்டும்.

குளிர்காலத்திலும், சித்திரை-வைகாசி மாதங்களிலும் கட்டிய கட்டை மூன்று நாட்களுக்குப் பின் அவிழ்க் வேண்டும். அழுத்தமாக்க வேண்டிய இடத்தில் பித்தத்தினால் உண்டான புண்ணாக இருந்தால் சமமாகக் கட்டுப்போட வேண்டும்.

சமமாகக் கட்டுப்போட வேண்டிய இடத்தில் பித்தம், இரத்தம் இவற்றினால் உண்டான புண்ணாக இருந்தால் தளர்ச்சியாகக் கட்ட வேண்டும். தளர்ச்சியாகக் கட்ட வேண்டிய இடத்தில் பித்தம், இரத்தம் இவற்றினால் புண் ஏற்பட்டிருந்தால் அவ்விடத்தில் கட்டுப்போடக்கூடாது.

சரத்ருது ( ஐப்பசி- கார்த்திகை) கிருஷ்மருது (ஆனி- ஆடி) இந்தப் பருவங்களின் காலை, மாலை இரண்டு வேளையும் கட்டுப்போட வேண்டும்.

புண்களில் கட்டுப்போடாவிட்டால் பூச்சிகள், இலையான், ஈக்கள் கடிப்பதனாலும், புல், மரத்தண்டு, தூசி, குளிர்ச்சி, காற்று, வெயில் இவற்றின் சேர்க்கையினாலும், பலவித துன்பங்களால் துன்புறுத்தப்பட்டு புண்கள் அழுகும் தன்மையை அடைகின்றன. நெய் போன்ற எண்ணெய்ப் பசையுள்ள பொருட்கள், அந்தப்புண்ணில் வெகுநேரம் தங்கி நிற்பதில்லை. இடப்பட்ட மருந்தும் விரைவில் உலர்ந்து விடுகிறது. விரைவில் புண் ஆறுவதுமில்லை. ஆறினாலும் தோலில் நிறமாற்றம் ஏற்படுகிறது. எலும்பு தூளாகியும், கடைந்தும், நரம்பு இவை அறுந்தும் உள்ள புண், கட்டுக்கட்டுவதனால் விரைவில் குணமாகி விடுகிறது.

உட்காருவது, நிற்பது, உறங்குவது போன்ற எல்லாச் செயல்களினாலும் துன்பத்தைக் கொடுப்பதில்லை. புண்ணில் உள்ள

ஓரங்கள் மேலே உயர்ந்தும், புடைத்தும், நேர்மையான நிலையிலும் இல்லாததும், கெட்டியாகவும், அதிக வலி இருக்கிற புண், கட்டுக்கட்டுவதனால் சமமாகவும், மிருதுவாகவும், வலி நீங்கியும், சுத்தமாகவும் அதி விரைவில் ஆற்றிவிடுகிறது.

அழுத்தமாகவும், மாமிசம் அடர்த்தியில்லாததும். எண்ணெய்ப்பசையற்றதும், ஆறதுமான புண்ணை தோஷங்களுக்கும் ஏற்றவகையில் பழுக்காததும், இளமையுள்ளதும், துவாரம் அற்றதும், சுத்தமானதும், கரடுமுரடு இல்லாததுமான, பாலுள்ள மரங்களின் இலைகளை நான்கு புறமும் நன்றாக வைத்துக் கட்ட வேண்டும். குஷ்ட நோயில் ஏற்படும் புண்கள், நெருப்புச்சுட்ட புண்கள், நீரழிவு நோயினால் உண்டான சிறிய கட்டிகள், புண்ணின் ஓரங்களில் சிறிய முடிச்சுக்களில் ஏற்பட்டிருக்கும் புண், மூஞ்சூறு நஞ்சினால் ஏற்பட்டிருக்கும் புண், காரப்பொருட்களினால் சுடப்பட்டிருக்கும் புண், நஞ்சினால் தோன்றியிருக்கும் புண், மாமிசம் அழுகிப்போயிருக்கும் புண், ஒரு வகையான ஆசனவாய் அழற்சி, சிதைவுற்ற மாமிசமுள்ள புண், வியர்வையும், எரிச்சலுமுடைய புண், வீக்கம் உண்டாகி பரவும் தன்மையுள்ள புண் என இவ்விதப் புண்களுக்கு கட்டுப்போடக்கூடாது.

நன்கு கவனிக்கப்படாத புண்ணில் ஈக்கள், பூச்சிகளைக் கொண்டு சேர்க்கும் அந்தப்பூச்சிகள், புண்ணைத் தின்பதுடன், வலி, வீக்கம், இரத்தக்கசிவு இவற்றை உண்டாக்குகின்றன.

இதில் புண்ணைச் சுத்தம் செய்து புங்கு, எருக்கு, வேம்பு, முருக்குமரம் இவற்றின் பட்டையினாலான கல்கத்தைப் பசுவின் சிறுநீரில் கலக்கிப் பூசவேண்டும்.

காரப்பொருட்களின் சீரை அங்கு ஊற்ற வேண்டும். அல்லது புண்ணில் உள்ள பூச்சிகள், புதிதாக வைக்கப்பட்ட மாமிசத்துண்டை பற்றிக் கொள்ளும். அப்போது அந்த மாமிசத்துண்டை எடுத்துவிடுவதன் மூலம் பூச்சிகள் வெளியேறலாம்.

புண்ணில் ஏற்படும் நிலைகளை அறிந்து அவற்றிற்கு ஏற்றவாறு வாதம், பித்தம், கபம் என்ற தோஷங்களையும், காலத்தையும்,

நோயாளியின் உடல் நிலையையும் அறிந்து அவற்றிற்கு ஏற்ற சிகிச்சை செய்ய வேண்டும்.

தோஷங்கள் உள்ளடங்கியுள்ள புண்ணை மருத்துவர் அவசரப்பட்டு சோதிக்காமல் ஆற்றக்கூடாது. அந்த தோஷம் சிறு பிழையினாலும், உள்ளுக்குள்ளேயே வளர்ச்சி பெற்று மறுபடியும் துன்பத்தை விளைவிக்கும். ஆகையால் நன்றாக ஆறும் வரையில் சிகிச்சை செய்ய வேண்டும்

நோயாளிக்கு புண் ஆறியபோதிலும், அசீரணமான உணவு, உடற்பயிற்சி, புணர்ச்சி, கோபம் இவற்றை விட்டு விட வேண்டும். இம்முறையை ஆறு அல்லது ஏழு மாதங்கள் வரை கடைப்பிடிக்க வேண்டும்.

## நோயாளியில் செய்யப்பட்ட
## பரிசோதனை முடிவுகள்

நீரழிவு நோயானது பல்வேறு உபத்திரவங்களைக் கொடுக்க வல்லது. இதில் கட்டுப்பாட்டுக்கு வரமுடியாத காலில் காணப்படும் விரணங்கள் முக்கியமானவை. இது முக்கியமானதும், பிரதானமானதுமான காரணி காலின் தொற்றுக்குள்ளான பாகத்தை அகற்றுவது. (Lower external Ambutation) ஆகும். இதற்கு சித்த மருத்துவத்தில் பலவகையான மருந்துகள் காணப்படுகின்றன. இதில் பச்சைஎண்ணெய், காரச்சீலைகள், உட்பிரயோகமாக பாவிக்கும் இரசகெந்திமெழுகு, குங்கிலியக்களிம்பு, பஙற்கிப்பட்டை சூரணம், முறிகிரந்திப்பற்பம், தாளங்காய் கிரந்திஎண்ணெய் எனப் பல்வேறு மருந்துகளைக் குறிப்பிடலாம்.



படம் 1 நோயாளி விரல் விரணத்தில் உள்ள நிலையைக் காட்டுகிறது.



படம் - 2 மேற்குறிப்பிட்ட நோயாளிக்கு 21/2 மாத சித்த காரச்சீலை மருந்தும் உட்மருந்தும் கொடுத்து சிகிச்சையளித்ததன் பயனாக குணமடைந்த கால் விரணத்தைக காட்டுகிறது



படம்- 3 நீரழிவு நோயாளியை பெருவிரல் விரணத்துடன் காணும் நிலையை காட்டுகிறது. இந்நோயாளியில் புழுக்கள் காணப்படும் விரணம் ( Maggot infested diabetic ulcer)



படம் - 4 ஆனது புண்ணில் உள்ள புழுக்களை அகற்றும் முறையைக் காட்டுகிறது.

புண்ணில் உள்ள புழுக்களை அகற்றுவதற்கு தேப்பந்தைலம் மிகவும் பிரபல்யமானது. காலை, மாலை தேப்பந்தைலத்தை வைத்துக் கட்டும் போது புழுக்கள் இலகுவாக அகற்றப்படும். பின் சரசபாதி தைலம் வைத்துக்கட்டி கடைசியாக புங்கும் தைலத்தைப் பிரயோகிக்கும் போது புண் விரைவாக குணமாகும். நீரழிவு நோயாளி நீரழிவுக்கு இன்சுலின் மருந்து பாவித்தால் தொடாந்து பாவிக்க வேண்டும். ஆரம்ப நிலையில் கடுமையான நுண்ணுயிர்க்கொல்லிகள் பாவிப்பது சிறந்தததது.



படம்- 5 ஆனது புழுக்களால் ஆன கால் விரணம் மாறிய நிலையைக் காட்டுகிறது.

# விரணங்களுக்கான சிகிச்சை முறைகள்

## குடிநீர் :-

.பறங்கிப்பட்டை குடிநீர்:-

1. பறங்கிப்பட்டை
2. கடுகுரோகினி
3. வேப்பம்பட்டை
4. சீந்தில்
5. மரமஞ்சல்
6. வசம்பு
7. கடுக்காய்
8. தான்றிக்காய்
9. மஞ்சிஷ்டி
10. கோரை இதில் சுத்தி செய்ய வேண்டியவற்றை சுத்தி செய்து 8பங்கு நீர் விட்டு 1பங்காகக் குறுக்கி காலை,மாலை 5 நாட்களுக்கு கொடுக்கவும். பின் மீண்டும் தொடர்வதை குணங்குறிகளைப் பார்த்துச் செய்ய வேண்டும்.

## 2. விரணசஞ்சீவிதைலம்:-

நல்லெண்ணெய் 3200மிலீ, அரிதாரம் - 6கிராம், சேராங்கொட்டை - 300கிராம் நல்லெண்ணெயை அடுப்பேற்றி எரித்து கொதிக்கும் பக்குவத்தில் பொடி செய்து வைக்கப்பட்டுள்ள தாளகத்தை (அரிதாரம்) கொஞ்சம் கொஞ்சமாக தூவ வேண்டும். பின் சேராங்கொட்டையை எண்ணெயில் போட்டு சேராங்கொட்டை மிதந்து வரும் பக்கவத்தில் இறக்கி வைத்துக் கொள்ளவும். அரிசி கலந்த நீரில் ஊற்றி வைக்க வேண்டும். மறுநாள் எரித்து நீர் முழுக்க நீங்கியதும் இறக்கி வைக்கவும்.

ஆறாத விரணங்களுக்கு வெளிப்பிரயோகமாக பாவித்தல்.

## 3. பச்சை எண்ணெய்:-

ஊமத்தையிலை - 750மிலீ, துரிசு- 10கிராம், தேங்காய்எண்ணெய்- 750மிலீ துரிசை கல்வத்திலிட்டு பொடித்து வைத்துக் கொண்டு ஊமத்தைச்சாறு, தேங்காயெண்ணெய்

இரண்டையும் அடுப்பேற்றி கொதித்தவுடன் துரிசு பொடியைக் கலந்து சிறுதீயாக எரிக்கவும். வெற்றிலை வெடிபதத்தில் அறக்கி ஆற விடவும்.

இது ஆறாத விரணங்கள், தசைவளர்ச்சியுள்ள புண் ஆகிவற்றுக்கு முக்கியமானது.

**4. வங்கவிரணக்களிம்பு:-** வங்க செந்தூரம் -10கிராம், மிருத்தார்சிங்கி- 10கிராம், இரசசெந்தூரம்- 5கிராம், இரச கற்பூரம்- 5கிராம், தேன்மெழுகு- 80கிராம், தேங்காய்எண்ணெய்- வேண்டியளவு சரக்குகளை தனித்தனி அரைத்து பின் தேஎண்ணெயை ஒரு பாத்திரத்தில் அடுப்பேற்றி எரித்து கொதித்தும் தேன்மெழுகு போட்டு உருக்கி இறக்கி ஆறவிடவும்.

## 5. புங்கம்பட்டை எண்ணெய்:-

இரசம், பொன்னரிதாரம், மிருத்தார்சிங்கி, கந்தகம், துத்தம், துரிசு, கைப்பு, களிப்பாக்கு, குங்கிலியம், வேம்பாடல் வகை 5கிராம் எடுத்து தனித்தனி பொடித்து 750மிலீ புங்கஞ்சாறு, 1லீ தேங்காய்ப்பால் சேர்த்து எரித்து வெற்றிலை வெடிபதத்தில் எடுக்கவும்.
குறிப்பு:- இந்த எண்ணெய் யாழ்ப்பாணத்தில் பிரபல்ய வைத்தியர்களால் உபயோகிக்கப்பட்ட முறையாகும்.

## 6. தாளங்காய் கிரந்தி எண்ணெய்:-

1. தாளங்காய்ச்சாறு
2. குப்பைமேனிச்சாறு
3. கோழியவரைச்சாறு
4. பீச்சுவிளாத்திச்சாறு
5. இயங்கமிலைச்சாறு
6. குன்றிமணியிலைச்சாறு ( இதற்குப் பதிலாக சில வைத்தியர் முள்முருக்குச்சாறு)

வகை 1படி ( கொத்து-2) 1.4 லீற்றர் எடுத்துக்கொள்ளவும்

1.கந்தகம்
2.இரசம்
3.துரிசு

4 .துத்தம்

5. சாதிலிங்கம் வகைக்கு 20கிராம்

6. நீரடிமுத்து - 20கிராம்

7. சேராங்கொட்டை - 45

8. வெள்ளைப்பாஷாணம்- 10கிராம்

9. கருஞ்சீரகம்- 20கிராம்

10. நேர்வாளம்- விதை-100

11. கிருமிசத்துரு- 10கிராம்

வேப்பெண்ணெய் - 1100மிலீ

தேங்காய்எண்ணெய் - 750மிலீ

சுத்தி செய்ய வேண்டியதை சுத்தி செய்து எரித்து மெழுகு பதத்தில் கொடுக்கவும்.

உட்பிரயோகமாவும், வெளிப்பிரயோகமாகவும் பாவிக்கலாம்.

*பத்தியம்:-* பால்சோறு, மோர்ச்சோறு.

## 7. சகல கிரந்திகட்கும் எண்ணெய்:-

இயங்கு, பாகல், வெற்றிலை, முடிதும்பை, குப்பைமேனி, முட்புல்லாந்தி, தேங்காய்ப்பால் - வகை 1.4லீ

1. கந்தகம்
2. துத்தம்
3. துரிசு
4. திப்பலி
5. பறங்கிக்கிழங்கு
6. கிருமிசத்துரு
7. வெண்குந்திரிக்கம்
8. வேம்பாடல்
9. மிளகு
10. ஈரவெண்காயம் - வகை 5கிராம்

இவற்றை எல்லாம் எடுத்து காய்ச்சி மெழுகு பதத்திற்கு முன்னதாக இறக்கி காலை, மாலை கொட்டைப்பாக்குப்பிரமாணம் கடுகை உள்ளுக்கு எடுத்து எண்ணெயை மேலுக்கு பூசி அரப்பு தேய்த்து ஒன்றுவிட்ட ஒரு நாள் வெந்நீரில் குளிக்கவும்.

## 8. இரும்பு ஆணி, தகரம் குத்தினால்:-

ஒரு எலுமிச்சம் பழத்தை 4 துண்டாக்கி வேப்பெண்ணெய் நன்றாக பொரித்து ஒவ்வொரு துண்டாக எடுத்து நன்கு பிசைந்து கட்டினால் உள்ளே கறல் ஏதாவது இருந்தால் வெளியே வந்து விடும். அதன் பின் அந்த எண்ணெயை காயத்தில் போட்டு வர சுகமுண்டாகும்.

## 9. முள் குத்தி முறிந்தால்:-

விளாம்பழத்தையும் வாயிலிடும் சிப்பி சுண்ணாம்பையும் பிசைந்து ஸ்தானத்தில் 2-3 முறை கட்ட உள்ளே முறிந்திருப்பது வெளியே வரும்.

## 10. ஏற்புத்தூள்:-

இரசம், அரிதாரம், வெண்காரம், பொரிகாரம், சீனக்காரம், சாதிலிங்கம், இருசீரகம், சுக்கு, வசம்பு, சாதிக்காய் வகை-5கிராம் எடுத்து நவபுடமிடவும்.

## 11. கந்தக இரசாயணம்:-

1. கந்தகம் சுத்தி செய்தது - 500 கிராம்
2. பறங்கிக்கிழங்கு சுத்தி செய்தது - 50கிராம்
3. கொடிவேலிவேர்ப்பட்டை சுத்தி செய்தது- 50கிராம்
4. விளைவுகற்பூரம்- 50கிராம்
5. அமுக்கிராகிழங்கு- 50கிராம்
6. சாதிக்காய்- 50கிராம்
7. வசவாசி - 50கிராம்
8. சடாமாஞ்சில்- 50கிராம்
9. சிறுநாகம்பூ - 50கிராம்
10. கராம்பு- 50கிராம்

இதில் சுத்தி செய்து தனித்தனியாக இடித்து பின் ஒன்றாக சேர்த்து கலந்து அரைத்து பின் விளைவு கற்பூரம் சேர்த்து அரைத்து பத்திரப்படுத்துக.

அளவு:- 500கிராம்- 1கிராம் தினம் இரு முறை. பசுநெய் அல்லது பசுப்பாலில் கொடுக்கவும்.

## 12. இரசகெந்தி மெழுகு:-

1. இரசம் (சுத்தி) - 4கிராம்
2. கந்தகம் (சுத்தி) - 4கிராம்
3. இரசகற்பூரம் (சுத்தி)- 4கிராம்
4. அரிதாரம் (சுத்தி) - 4கிராம்
5. ஊசிக்காந்தகம் (சுத்தி) - 4கிராம்
6. துருசு (சுத்தி) - 4கிராம்
7. பால்துத்தம் (சுத்தி) - 4கிராம்
8. மிருத்தார்சிங்கி (சுத்தி) - 4கிராம்
9. சுக்கு
10. ஓமம்
11. மஞ்சல்
12. திப்பலி
13. சித்தரத்தை
14. வெண்கோட்டம்
15. வாலுளுவை
16. சோம்பு
17. ஏலம்
18. சீரகம்
19. மிளகு
20. சாதிக்காய்
21. கார்போகவரிசி
22. மாயாக்காய்
23. திப்பலிக்கட்டை
24. வாய்விடங்கம்
25. வசம்பு
26. இலவங்கம்
27. பறங்கிப்பட்டை
28. சேங்கொட்டை (சுத்தி)
29. கடுக்காய்த்தோல்
30. கருஞ்சீரகம்
31. காட்டுசீரகம்
32. சிறுதேக்கு

33. தாளிசபத்திரி
34. உலர்ந்ததிராட்சை
35. பிரப்பங்கிழங்கு
36. எட்டிவிதை (சுத்தி)
37. தேற்றாவிதை
38. நீர்முள்ளிவிதை
39. எள்ளு
40. கொள்ளு
41. கொப்பறா
42. சின்னிவேர்
43. இயங்கம் வேர்
44. அமுக்கிராக்கிழங்கு(சுத்தி)
45. ஆகாயக்கருடன்
46. சித்திரமூலவேர்ப்பட்டை (சத்தி) வகை- 4கிராம்
47. பனைவெல்லம் - 184 கிராம்
48. கோழிமுட்டை - 2

மேற்கூறப்பட்ட சரக்குகளில் இடிக்க வேண்டியதை உரலில் இடித்து சூரணம் செய்து, பின் அரைக்க வேண்டியதை முறைப்படி கல்வத்திலிட்டு அரைத்து பொடித்து மேற்படி சூரணத்தையும் ஒன்று சோத்து அரைத்து வைத்துக் கொள்க. பின்னா் பனை வெல்லத்தை உரலிலிட்டு நொருக்கி மேற்குறிப்பிட்ட ஒன்று சேர்த்து அரைத்து வைத்திருந்த சூரணத்தை உரலிலிட்டு இரு முட்டைகளையும் உடைத்து அதற்குள் விட்டு பூண் இல்லாத உலக்கையால் நன்கு இடிக்குக. இவ்வாறு இடிக்கும் பொழுது மெழுகுப் பதம் ஏற்படும் அதனைப் பக்குவப்படுத்தி வைக்க. அளவு:- 200மிகி தினம் இருவேளை சாப்பாட்டுக்குப் பின்

**அனுபானம்:-** பனைவெல்லம், வாழைப்பழம்.

***பத்தியம்:-*** பாலும் சோறும் அல்லது மோரும் உண்ணவும். உணவு உண்டவுடன் மருந்தை உட்கொள்ளவும். வெறும் வயிற்றில் மருந்தை உண்ணக்கூடாது. எண்ணெய் முழுக்கு உள்ள போது மருந்து உண்ணக்கூடாது.

## 13. குப்பிளாள் இலை எண்ணெய்:-

குப்பிளாய் இலை 1பிடி
வேப்பிலை 1பிடி
துரிசு 5கிராம்
மஞ்சல் -10கிராம்
தேங்காய்க்கயா் சிறிதளவு
வேப்பெண்ணெய் 1போத்தல் முறைப்படி எண்ணெய் காய்ச்சி வடிக்கவும்.

திருக்கையடித்த புண்களில் திரி வைத்து மருந்து கட்ட சிறப்பானது. நாட்பட்ட கால் விரணங்கள், புழு உள்ள விரணங்களில் சிறப்பாக தொழிலாற்றும். யாழ்ப்பாணத்து முக்கியமாக தீவகப்பிரதேசத்தில் வைத்தியர்களின் பாவனையிலும், கைவைத்திய முறையாகவும் பயன்பட்டு வருகிறது.

## 14. சிரங்குக்களிம்பு:-

இரசசெந்தூரம் - 40கிராம்
மிருத்தார்சிங்கி - 40கிராம்
கந்தகம் - 40கிராம்
தேன்மெழுகு - 2கிலோகிராம்
நீரடிமுத்தெண்ணெய் - 1.8கி.கி
வேப்பெண்ணெய் - 1.8 கி.கி
பொடிக்க வேண்டியதை பொடித்து மற்றய சரக்குகளுடன் கலந்து அரைத்து களிம்பாக எடுக்கவும்.

## 15. பச்சைச்சேர்வை:-

துருசு -10கிராம்
இரசம் -5கிராம்
துத்தம் - 10கிராம்
குங்கிலியம் - 10கிராம்
முள்முருக்கமிலைச்சாறு - தேவையானளவு
ஊமத்தம் இலைச்சாறு - தேவையானளவு
தேன்மெழுகு - 250கிராம்

இரசத்தையும், துரிசையும் கல்வத்திலிட்டு முள்முருக்கம் சாற்றில் விட்டு அரைக்கவும். பின் துத்தம், குங்கிலியத்தையும் ஊமத்தமிலைச்சாறு விட்டு அரைத்து பின் எல்லாவற்றையும் சேர்த்தரைத்து கடைசியாக தேன்மெழுகைச் சேர்த்து அரைத்து சேர்வையாக்குக. இதனால் புண், சிரங்கு, புரையோடிய புண் தீரும் இது வைத்தியர் ஏவிஆர் அவர்கள் யாழ்ப்பாணவைத்தியர்கள் பிரபல்யமாக பாவித்ததாக யாழ் பல்கலைக்கழக சித்தமருத்துவ மாணவருக்கு மருத்துவக்கண்காட்சி 1994 இல் தந்துதவியது.

## 16. புண்கழுவ மருந்து:-

படிகாரம் 35 கிராமுக்கு 11.2 லீற்றர் நீர் கலந்து புண்களைக் கழுவப் பாவிக்கவும்.

ஆல், அரசு. அத்தி. இத்தி, நாவல் ஆகியவற்றை முறைப்படி குடிநீரிட்டு புண் கழுவப் பாவிக்கலாம்.

கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய் (திரிபலை ) குடிநீரிட்டு புண் கழுவப் பாவிக்கலாம்.

மஞ்சல், புளியமிலை, வேப்பிலை, சீயாக்காய் முறைப்படி அவித்து குடிநீரிட்டு புண் கழுவப் பாவிக்கலாம்.

## 17. சிரங்கெண்ணெய்:-

துத்தம், துரிசு, கந்தகம், வேம்பாடல், கிருமிசத்துரு, கார்போகவரிசி வகை 10கிராம் எடுத்து தேங்காய்யெண்ணெய் 750மிலீ எலுமிச்சம்பழம் 2 விட்டு அரைத்து கரைத்து முறுகுப் பதமாக காச்சவும்.

## 18. பிளவை எல்லாவற்றுக்கும் எண்ணெய்:-

கௌரிபஷாணம், குதிரைப்பாஷாணம், அப்பளக்காரம், சவுக்காரம்,சீனக்காரம், வெண்காரம், துத்தம், துரிசு வகை 5கிராம் கல்லுப்பு-20கிராம், கொடிவேலிவேர்- 20கிராம், பிராயம்பட்டைப்பாலும் கூட்டவும். இவற்றைத் தூளாக்கி வேப்பெண்ணெயில் கொதிக்கவைத்துப் போடவும்.

சதுரக்கள்ளிப்பால், எருக்கம்பால், கொடிக்கள்ளிப்பால் இவை கூட்டியரைத்து பதமாக வடித்தெடுத்து கொம்புச் சிமிழியில் வைத்து சதுரக்கள்ளிப்பாலில் குளப்பிப் போடவும்.

## 19. தீராத புண்ணுக்கு எண்ணெய்:-

பச்சைநாவி, நிறுவிஷம், நேர்வாளம், உள்ளி, மிளகு, செஞ்சந்தணம், மனோசிலை, இரசம், துரிசு, துத்தம், கைப்பு, களிப்பாக்கு இவை வகை-5கிராம் புங்கம்வேர், காஞ்சுரம் வேர், பருத்திப்பிஞ்சு, நாய்பாவல், வேலிப்பருத்தி இவை சாறு 1.4லீ, வேலிப்பருத்திச்சாறுவிட்டு அரைத்து வேப்பெண்ணெய் விட்டு 3 நாள் கியாளம் ஊறி மெழுகுப்பதத்தில் வடித்து புண்ணில் போட சகலதும் மாறும். அழுகுசப்பாணிப்புண்கூட மாறும்.

## 20. காயக்கட்டுகளுக்கு பூச எண்ணெய்:-

விளக்கெண்ணெய் 11/2 போத்தல்
புளியிலைச்சாறு 11/2 போத்தல்
பம்புறு அலைச்சாறு 11/2 போத்தல்
பூமத்தம் இலைச்சாறு 3போத்தல்

கல்மதம், கல்நார், கராம்பு, வசவாசி, சாதிக்காய், கருஞ்சீரகம், நற்சீரகம், பெருங்காயம், கோட்டம், மதுரம், இந்துப்பு, கடுக்காய், குங்கிலியம், மரமஞ்சள் வகை- 10கிராம் மெழுகுப்பதமாய் வடித்துக் கொள்ளவும்.

## 21. கட்டுக்கு சாராய எண்ணெய்:-

வெட்பாலரிசி, பொன்னரிதாரம், கடுகுரோகினி, மனோசிலை, கராம்பு. அபின், செஞ்சந்தணம், நேர்வாளம், ஏலம், இலவங்கம், கோட்டம், அக்கரா அதிமதுரம், வேம்பாடல், கைப்பு, மல்லி, மரமஞ்சள், துத்தம், துரிசு, பெருங்காயம், இந்துப்பு, மிளகு, கடுகு, திப்பலி, மாயாக்காய், மஞ்சல், சித்தரத்தை, சதகுப்பை, களிப்பாக்கு, சீனம், வெள்ளைப்பஷாணம், கார்புகாவரிசி, சாதிக்காய். இருசீரகம், உள்ளி, தேற்றாவிதை, சுக்கு, வெந்தயம், வெளுத்தல் பிசின், வகை-5கிராம் அரைத்து தூளாக்கி வேப்பெண்ணெய், சாராயம் சரி கலந்து காச்சி நெல்லு வெடிபதத்தில் இறக்கி ஆற்றி வெற்றிலை

வெடிப்பதத்தில் தூள் போட்டு வடித்து எந்தக் கட்டுக்கும் போட வத்தும். புண் மாறும்.

## 22. சிங்கிரணத்திற்கு சேர்வை:-

கௌரிபாஷாணம், ஆழதாரம், மஞ்சல், நீலம் வகை சமஎடை கல்வத்திலிட்டு நல்லெண்ணெய் விட்டு அரைத்து நீா விடடரைத்து கழுவி வைத்து சிங்கி, பிளவை, சதை வளா்ந்திருக்கும் இரணம், முளை, ஆறாத விரணங்கள் இவைகட்டு இந்தச் சோ்வையை தடவி போடல் வேண்டும்.

## 23. பச்சைச்சேர்வைச் சீலை:-

கௌரிபாஷாணம், மிருத்தார்சிங்கி- வகை 1பங்கு, மயில்துத்தம், அரிதாரம் -வகை 2பங்கு எடுத்து நல்லெண்ணெய் விட்டு மைபோல் அரைத்து பின் நீா்விட்டு கழுவி வழித்தெடுத்துக் கொள்க. இது உட்சதை வளர்ச்சி இரணம், மாா்பில் காணும் பிளவை ஆகியவற்றுக்கு சிறந்தது.

## 24. அரையாப்பு கட்டிக்கு களிம்பு:-

குங்கிலியம், மயில்துத்தம், பால்துத்தம், இலிங்கம், கா்ப்பூரம், விளாம்பிசின் வகை சமஎடை எடுத்து நல்லெண்ணெய் விட்டு மை போல் அரைத்து பின் 7தடவை நீரில் கழுவி எடுத்து சிங்கி, பிளவை, பௌத்திரம், அரையாப்புகட்டி, ஆறாதவிரணம் இவைகட்கு சீலையில தடவி போட்டு வர இரணம் ஆறும்.

## 25. காரச்சீலை:-

மயில்துத்தம், அரிதாரம், இலிங்கம், கந்தகம், இரசம், வெங்காயம் -வகை 5கிராம் வெள்ளெருக்கம்பூ- 30கிராம் கல்வத்திலிட்டு ஊமத்தமிலைச்சாறு விட்டு அரைத்து சீலையில் ஏற்றி உலர்த்தி வைத்து ஆறாதவிரணம், சூலை, வெடிப்பு, கிரந்தி, பௌத்திரம், ஆகியவற்றுக்கு இந்த சீலையை மேல் போட்டு கொண்டு வர கூடிய சீக்கிரத்தில் ஆறும்.

## 26. சகல அரணங்களுக்கும் தைலம்:-

இரசம், கந்தகம், காந்தம், அரிதாரம், லிங்கம் வகை சம எடை எடுத்து நல்லெண்ணெய் விட்டு அரைத்தெடுக்கவும். ஆறாதவிரணம், இரத்தக்கட்டிகளைக் கொண்டிருக்கும் சதைகள், பிளவை, பௌத்திரம், குஷ்டம் இவைகளுக்கு போட்டு வர தீரும்.

## 27. வெண்காரச்சீலை:-

வெள்ளை பாஷாணம், கௌரிபஷாணம், குங்கிலியம், வெள்ளைச்சவுடு வகை சம எடை அதற்குச் சமம் வெள்ளைத்துணி சேர்த்து இடித்துப் பொடி செய்து இரணங்களின் மீது போட்டுக்கட்ட சகல இரணங்களும் மாறும்.

## 28. முளை விழுத்த கறுப்பு காரசீலை:-

கௌரிபாஷாணம், அரிதாரம், வெள்ளைப்பாஷாணம், குங்கிலியம் வகை 2பங்கு, சுண்ணம், பால்துத்தம், மிருத்தார்சிங்கி வகை 1பங்கு நிறுத்தெடுத்து இதற்குச் சமனாக மஞ்சள் பொடி சேர்த்து சீலையில் வைத்து முளையின் மீது வைத்துக் கட்ட முளை அற்று விழும். உபாதை தீரும்.

## 29. மூலத்திற்கு குளிர்ந்த பச்சைக்காரசீலை:-

மிருத்தார்சிங்கி, கௌரிபாஷாணம், அரிதாரம், வெள்ளைப்பாஷாணம், மயில்துத்தம் வகை சம எடை அதற்குசசமன் பழந்துணி சேர்த்து நொருங்க இடித்து பொடியாக்கி பௌத்திரம், மூலம், குஷ்டம் இவைகளுக்கு மேல் போட்டுக் கொண்டுவர சீக்கிரத்தில் ஆறும்.

## 30. நீலக்காரம்:-

பால்துத்தம், சங்கு, மயில்துத்தம் வகை சமஎடை எடுத்து அதற்கு சமனாக வெள்ளைத்துணி சேர்த்து இடித்துப் பொடித்து எரிச்சலுடைய இரணத்தின் மேலே போட்டுக் கொண்டுவர எறிசசிங்கி இரணம் ஆறி உலரும்.

## 31. புரைச்சதை புண்ணுத்திரி:

மயில்துத்தம், பால்துத்தம், பாதரசம், அரிதாரம், நீலம், கந்தகம் வகை சம எடை கல்வத்திலிட்டு இளநீர் விட்டு மைபோல் அரைத்து சீலையில் ஊட்டி சதையை தின்று கொண்டு போகும் புரையில் இந்தச் சீலையை திரிசெய்து புரைக்குள் ஏற்றிக்கொண்டுவர சதையைக் கரைத்துப் புண் இரணத்தைக் கூடிய சீக்கிரத்தில் ஆற்றி உலர்த்தி விடும்.

## 32. சிகப்புத் தண்ணீர்:-

விங்கம், செந்தூரம், நீலம், குங்கிலியம், காவிமண், சீலை, வெள்ளைப்பாஷாணம் வகை சமஎடை எடுத்து கல்வத்திலிட்டு கொடிப்பாலைச்சாறு விட்டு மைபோல் அரைத்து வழித்து குப்பியிலைடைத்துக் கொள்க. சீலையில் தோய்த்து திரி செய்து புரை இரணங்களுக்கு உள்ளுட்ட ஆறாத விரணங்கள் ஆறும். எரிச்சலடங்கும். பௌத்திரம், பிளவை, தொடைவாழைப்பருவு இவைகளுக்கு மேல் போட்டு உபயோகப்படுத்திக் கொண்டுவர கூடிய சீக்கிரத்தில் மாறும்.

## 33. எரிஇரணத்திற்கு குளிர்நத நீர்:-

பாதரசம், சங்கு, காவிக்கல், லிங்கம், மயில்துத்தம், பால்துத்தம், கடுக்காய் வகை சம எடை எடுத்து கல்வத்தில் இட்டு கள்ளால் மை போல் அரைத்து குப்பியிடைக்க. எரிஇரணங்களிற்கு பூசி வர மாறும். குளிர்ச்சியாக இருக்கும்.

## 34. எரி இரணத்திற்கு கறுத்த குளிர்ந்த நீர்:-

மஞ்சள்சுட்டகரி, வசம்புசுட்டகரி, பாதரசம்,கந்தகம், நீலம் வகை சம எடை கல்வத்திலிட்டு கள்ளினால் அரைத்து மைபோர் குப்பியிலடைக்கவும். இந்த நீரை சீலையில் நனைத்து மேலே போட்டுக் கொண்டு வர குளிர்ச்சியாக இருக்கும். சகல இரணங்களும் மாறும்.

## 35. புண்கள் புரைகள் மாறத்தைலம்:-

குங்கிலியம், சாம்பிராணி, பாதரசம், கந்தகம், மயில்துத்தம், பால்துத்தம் வகை 5கிராம், நீலம் -30கிராம்
இவற்றை பொடித்து வைத்துக் கொண்டு

தும்பைச்சாறு, முருங்கையிலைச்சாறு, துளசிசாறு, புங்கனிலைச்சாறு, நுனாயிலைச்சாறு, கையாந்தகரைச்சாறு, குமரிச்சாறு, வில்வயிலைச்சாறு, நல்லெண்ணெய் வகை 1.4லீற்றர் எரித்து தைலபதத்தில் இறக்கி வடித்து வைத்துக் கொண்டு சூலை, புரை, பிளவை, தாள்புத்து பௌத்திரம், பலவித இரணங்களும் இந்த தைலத்தை சீலையில் துவட்டி மேல் போட்டுக் கொண்டு வர இரணங்கள் ஆறி புரைகள் மாறும்.

## 36. சர்வ வீக்கத்திற்கு பற்று:-

அபின் சிறிதளவு. கடுகு,பெருங்காயம், நேர்வாளம், கரியபவளம் வகை 15கிராம் கல்வத்திலிட்டு எருக்கஞ்சாறு விட்டு மைபோல் அரைத்து வீக்கத்தின் மீது பூசிக் கொண்டு வர பிளவை கட்டி, பௌத்திரம், வீக்கம் வற்றும்.

## 37 .சர்வ வீக்கத்திற்கு கொடும் பற்று:-

பாதரசம், கந்தகம்,வெங்காயம்,நேர்வாளம்,வெங்காயம், பெருங்காயம் வகை சமஎடை எடுத்து கல்வத்திலிட்டு திருகுக்கள்ளிச்சாறு விட்டு மைபோல் அரைத்து கட்டிகள் சூலைவாதக்கட்டிகள், மெல்வீக்கம், பிளவை பௌத்திரம் இவைகட்கு மேல் பூசிக் கொண்டுவர வீக்கங்கள் வாடும். கட்டிகள் கரையும்.

## 38. இரணங்களுக்கு பிளாஸ்திரி:-

30 கிராம் குங்கிலியத்தை வெண்ணெயில் கலந்து கடைய வெண்ணெயானது திரளும். அதை வழித்து குப்பியில் அடைக்க சீலையில் தடவி இரணங்களுக்கு வைக்க இரத்தம், சீழ் போகும் எரிச்சல், புடைச்சல் தீரும். நரம்புவலி, இசிவுவலி தீரும்.

## 39. அட்டைக்கடிக்கு மருந்து:-

கடிவாயில் இரத்தம் போகும் நிலையில் துரிசை தூள் செய்து கடிவாயில் வைக்க தீரும்.



படம் - 6 காரச்சீலைக்கு தயாரான விரணத்தை காட்டுகிறது.




படம்- 7. காரத்திரி தயாரிக்கும் முறையை காட்டுகிறது.



படம் - 8 கால் விரணத்திற்கு காரத்திரி உபயோகிக்கிற முறையைக் குறிக்கிறது.

## புங்கம் வேர்த்தைலம்:

(வைத்தியர். சோ. கனகசுந்தரம் கொடிகாமம்.தந்துதவியது வைத்தியர் த. சத்தியசீலன் சண்டிலிப்பாய். கைகண்ட அனுபவமுறை)

1. புங்கம்வேர்ப்பட்டைச்சாறு
2. குப்பைமேனியிலைச்சாறு
3. குன்றிமணியிலைச்சாறு
4. வெண்ஊமத்தையிலைச்சாறு
5. முள்முருக்கமிலைச்சாறு
6. தேங்காய்ப்பால் வகை- 1.4 லீற்றர்
7. கைப்பு
8. களிப்பாக்கு
9. மிருத்தார்சிங்கி
10. வேம்பாடல்
11. துரிசு
12. கிருமிசத்துரு - வகைக்கு 5கிராம்
13. தேங்காய் எண்ணெய் 11/2 போத்தல்

முறைப்படி காய்ச்சி கடுகு பதத்தில் இறக்கவும்.

# இந்நூலாக்கத்திற்கு உதவிய நூல்கள்

இராமநாதன் பொ. சித்தமருந்தியல். 2000 யாழ்ப்பாணம்.

உத்தமநாராய்னன் க.சு.சித்தர் அறுவை மருத்துவம் 2005 சென்னை.

இரணவைத்தியம் சிதைவடைந்த நூல் (மேலதிக விபரம் கிடைக்கவில்லை)

துரைச்சுவாமி ஐயங்கர். ஏ.கே.ஏ.சி. அஷ்டாங்ககிருதயம் 1920 சென்னை.

ஸ்ரீராமதேசிகன் .எஸ்.என். வாக்படரின் அஷ்டாங்க சங்கிரகம் 1984 சென்னை.

வல்லிபுரம். (அமரர்) பருத்தியடைப்பு கட்டுவைத்தியர் கையெழுத்துப்பிரதி ஊர்காவற்றுறை.

பொன்னையா கையெழுத்துப்பிரதி (பொன்னையா வைத்தியப்பரம்பரை) திருநெல்வேலி

Joseph Thas J. Siddha Medicine for All Ages Second National Conference on 2002 Thirunelvely. India.